துரைத்தனத்தார் அங்கீகரித்தது

ஸ்ரீ

# பாண்டவ தூதன்







ஜயம் கம்பனியார்
புத்தக வியாபாரிகள்
நுங்கம்பாக்கம் :: சென்னை

விலை அணு 7½ [காபிரைட்

ஸ்ரீ

# பாண்டவ தூதன்

(துரைத்தனத்தார் அங்கீகரித்தது)




ஐந்தாம் பதிப்பு










ஜயம் கம்பனியார்

நங்கம்பாக்கம், சென்னை

# நூல் அடக்கம்

அத்தியாயம் பக்கம்

# முகவுரை

ஸ்ரீ வாசுதேவன் பாண்டவர்க்காகத் துரியோதனனிடம் தூது சென்ற விருத்தாந்தத்தை இச்சிரிய வசன நூல் கூறும். தமிழில் செய்யுள் நடையிலுள்ள 'வில்லி பாரதம்,' பெருந்தேவனூர் பாரதம்,' எனும் அரிய பெரிய நூல்களையே ஆதாரமாகக் கொண்டு இது எழுதப்பட்டுளது.

தூதர்கள், கால தேச வர்த்தமானங்களுக்கு இணங்கச் சமயோசித யுக்தி, புத்தி உள்ளவர்களாய்த் தங்கள் உட்கருத்தை எளிதில் வெளியிடாமல், தந்திரத்தால் எத் தொழிலையும் முடிக்க வல்லவர்கள் என்பது இந் நூலினின்று அறியலாகும். மற்றும், சகோதர ஒற்றுமை, செய்ந்நன்றி மறவாமை, இடுக்கண் அழியாமை, ஈகையின் மேன்மை, பெரியாரைப் பிழையாமை, பேராசையின் தீமை முதலிய நன்னீதிகளை இந் நூல் நன்கு உதாகரிக்கும். தமிழ்க் காவியங்களைக்கற்க அனைவர்க்கும் உற்சாகம் ஊட்டக் கருதி இவ்வசன நூல் வெளியிடலாயிற்று. கல்விச்சாலை மாணவர்க்கும், இல்லற வொழுக்கங் கொண்ட பெண்டிருக்கும், பிற தமிழ் அபிமானிகட்கும் இந்நூல் இன்சுவை விளைத்து இன்பம் ஊட்டற்பாலது என்பது கூறாமலே ஏற்படும்.

இங்ஙனம்

நூலாசிரியன்

## வமிசாவளி



சந்தநு
பீஷ்மன்
சித்திராங்கதன்
விசித்திரவீரியன்
திருதராஷ்டிரன்
பாண்டு
விதுரன்
துரியோதனன்
முதலாய
நூற்றுவர்
தருமன்
பீமன்
அருச்சுனன்
நகுலன்
சகாதேவன்

ஸ்ரீ

# பாண்டவ தூதன்

## 1. பூர்வ சரித்திரம்

சந்திர வமிசத்தில் வெகு காலத்திற்கு முன்பு பரதன் என்னும் ஓர் அரசன் இருந்தான். இவன், துஷ்யந்தனுக்குச் சகுந்தலையினிடம் தோன்றியவன். இவன் மரபில் உதித்தவர்க்குப் பரதர் என்று பெயர். இப்பரத வமிசத் தரசர் களில் குரு என்பான் ஒருவன் மிக்க புகழோடு செங்கோலோச்சி விளங்கினமையால், அவன் சந்ததியார், கௌரவர் என்றும் கூறப்படுவர். இந்தச் சந்திர குலத்தரசர்கள் அத்திநபுரியைத் தலைநகராகக் கொண்டு அரசாண்டு வந்தனர்.

சந்திர வமிசத்தரசரில் ஒருவனாகிய சந்தனு என்பானுக்கு முதன் மனைவியாகிய கங்கை யினிடம் பீஷ்மன் என்பானும், இரண்டாம் தாரமாகிய பரிமளகந்தியினிடம் சித்திராங்கதன், விசித்திரவீரியன் என இரண்டு குமாரர்களும் தோன்றினர். இவர்களில் மூத்தவனும் பீஷ்மன் என்போன் தந்தையின் பொருட்டுக் கடுமையான விரதம் மேற்கொண்டு விவாகமின்றிப் பிரமசாரி

யாகவே இருந்து விட்டான். சித்திராங்கதன் ஒரு நாள் காட்டில் வேட்டையாடுகையில், ஒரு கந்தருவனால் கொலையுண்டு இறந்தான். விசித்திரவீரியனுக்கு அம்பிகை, அம்பாலிகை என மனைவியர் இருவர். வியாசமுனிவரின் அருளால் அம்பிகை வயிற்றில் திருதராஷ்டிர னும், அம்பாலிகை வயிற்றில் பாணடுவும், அம் பாலிகையின் தாதிப் பெண்ணிடம் விதுரனும் வந்து பிறந்தனர்.

திருதராஷ்டிரன் பிறவிக் குருடனாகையால், பாண்டுவே அரசாட்சிக்கு உரியவ னாயினன். திருதராஷ்டிரன் காந்தாரி என்பாளை மணந்து, துரியோதனன், துச்சாதனன் முதலிய நூறு புத்திரர்களையும், துச்சளை எனும் ஒரு புத்திரி யையும் பெற்றான். பாண்டுமன்னன், குந்திபோஜ ராஜன் புத்திரியாகிய குந்தியையும், மத்திரதேசத் தரசன் மகளாகிய மாத்திரியையும் விவாகம் செய்து கொண்டான்.

குந்தி, தான் கன்னிப்பருவமா யிருக்கும் போது துருவாச முனிவரிடம் உபதேசம்பெற்ற மந்திரங்களை உச்சரிக்க, உடனே அங்கு எதிரில் தோன்றிய யமன் அருளால் தருமனையும், வாயு தேவனால் பீமனையும், இந்திரனால் அருச்சுனனை யும் பெற்றுப் பின் ஒரு மந்திரத்தைத் தன் சக்க ளத்தியாகிய மாத்திரிக்கு உபதேசித்தனள். அவள் அம் மந்திரத்தைக்கொண்டு அசுவநீ

தேவர்களின் அனுக்கிரகம் பெற்று நகுலன், சகதேவன் எனும் இரட்டைப் பிள்ளைகளைப் பெறலாயினள். குந்திதேவி கன்னியா யிருக்கும் போதே சூரியனுடைய கடாக்ஷத்தால் கர்ணனைப் பெற்றாள்; ஆனால் இவ் விருத்தாந்தம் வெகு காலம்வரையில் வெளியாகாமல் இரகசியமாகவே இருந்து வந்தது.

பாண்டவர்கள் இளைஞர்களா யிருக்கையி லேயே துரியோதனன், பீமனிடம் பகைமை கொண்டு, அவனைக் கொல்லப் பல வஞ்சனைகள் புரிந்தான். ஆனால் அவை யனைத்தும் வியர்த்த மாயின. குடும்பத்தில் மூத்தோனாகிய பீஷ்மன் இவ்விரு திறத்தார்க்கும் கிருபர், துரோணர் எனும் நல்லாசிரியரைக்கொண்டு கல்வி பலவும் கற்பித்தான்.

பாண்டு மகாராஜன் இறந்தபின் திருதராஷ் டிரன் தருமனுக்கு இளவரசு முடிசூட்டினன். அப்பொழுது துரியோதனன் அது பொறாமல், பாண்டவர்கள் வாரணாவதம் எனும் நகரத்திலி ருந்து ஆளும்படி தன் தந்தையைக்கொண்டு உத்தரவு பிறப்பிக்க, அவர்கள் அங்குச் சென்ற னர். பின்னர், பாண்டவர்களைக் கொல்லவேண்டு மென்று துரியோதனன் அவ்விடத்தும் ஓர் அரக்கு மாளிகை கட்டுவித்து, அதனுள்ளே அவர்களை வசிக்கச் செய்தான். அன்றியும் ஒரு நள்ளிரவில் நெருப்பு வைத்து, அம்மாளிகையை

எரித்துப் பாண்டவர்களை ஒழிக்கவேண்டு மென்று துரியோதனன் ஒரு நாளைக் குறிப்பிற் கொண்டிருந்தான். வீமன் அவ் வஞ்சத்தை முன்னரே அறிந்து, அம்மாளிகைக்குத் தானே நெருப்பு வைத்து, தருமன் முதலியோரையும் தாய் குந்தியையும் உடன்கொண்டு அம்மாளிகை யில் ஏற்பட்டிருந்த சுரங்க வழியாகத் தப்பிப் பிழைத்து இடும்ப வனம் சேர்ந்தான். பின்பு பாண்டவரும் குந்தியும், பிராமண வேடம் பூண்டு வேத்திரகீய நகரை நண்ணி, அவ்வூரை மிகவும் வருத்திய பகாசுரனைக் கொன்று துன் பம் களைந்து, அங்குச் சின்னுள் இருந்தனர்.

அப்பால் அவ்விடம்விட்டு அகன்று, பாஞ் சாலனது புத்திரியாகிய திரௌபதிக்குச் சுயம் வரம் எனக் கேள்விப்பட்டு அங்குச் சென்றனர். திரௌபதியை மணந்துகொள்வதற் கென்று ஏற்படுத்திவைத்திருந்த சுல்கத்தை அருச்சுனன் அறுத்து வீழ்த்தினுன். தாயின் சொல் பழுதுரு வண்ணம் ஐவரும் திரௌபதியை மணந்து, திருதராஷ்டிரனுடைய கட்டளையால் மீண்டும் அத்திநபுரம் வந்து சேர்ந்தனர்.

திருதராஷ்டிரன் உத்திரவின்படி அத்திந புரியைத் துரியோதனனும், காண்டவ வனத் தைச் சார்ந்த ஒருபாகத்தைத் தருமபுத்திரனும் ஆண்டு வந்தனர். கண்ணன் அருளால் அவ் வனத்தில் ஒரு நகரம் புதிதாக நிருமிக்கப்பட்டு,

இந்திரப்பிரஸ்தம் என்னும் பெயர் பெற்று, மிகுந்த அழகுடன் விளங்கிற்று.

பிறகு தருமபுத்திரன் இராஜசூய யாகம் செய்து பெரும் புகழுடன் அந்நகரத்தில் இருந்தனன். துரியோதனன் அது கண்டு மிகப் பொறாமை கொண்டு, தருமபுத்திரனைத் தந்திரமாகத் தன்னிடம் வரவழைத்து, தன் மாமனாகிய சகுனியைக் கொண்டு சூதாடுவித்து, தருமனது நாடு நகரங்களையும் பிற செல்வத்தையும் கைப்பற்றி, அவனையும் அவனுடைய தம்பியர் நால்வரையும் அவர்களுடைய மனைவி பாஞ்சாலியையும் அடிமை யாக்கிக்கொண்டான்.

அதன் பின் அக்கொடியோன், தன் தம்பி துச்சாதனனைக்கொண்டு திரௌபதியைச் சபையில் கொணர்ந்து நிறுத்தி மானபங்கம் செய்ய முயன்றான். அப்பொழுது கண்ணபிரான், அவளுடைய அசஞ்சலமான பக்திக்கு இரங்கி அவள் மானத்தைக் காத்தருளினர்.

திருதராஷ்டிரன் பாண்டவர்களை அடிமையினின்றும் நீக்கிச் செல்வத்தையும் கொடுத்தனுப்ப, துரியோதனன் அவர்களைத் தகைந்து, “நாடும் செல்வமும் யான் நல்கேன்,” என்று கடுமையாகக் கூறினன். பின்பு தருமன் மறு சூதாடிச் சயித்து, அடிமையினின்றும் நீங்கி, ஆண்டிருந்த பெரியோர்கள் சொற்படி பன்னீராண்டு வனவாசமும், ஓராண்டு அஞ்ஞாதவாச

மும் செய்ய இசைந்து, தம்பியருடனும் திரௌபதியுடனும் கானகம் ஏகினன்.

---

## 2. தௌம்மியன் தூது

பாண்டவர்கள் துரியோதனுதியருடன் சூதாடி நாடு நகரங்களை யிழந்து, பன்னிரண்டு ஆண்டு வனவாசமும் ஓராண்டு அஞ்ஞாதவாசமும் கழித்து, முடிவில் வெளித்தோன்றினர்கள். அதன்பின் அவர்கள், விராட ராஜனால் அமைக்கப்பெற்ற உபப்பிலாவிய நகரத்தில் இருந்தனர். இங்ஙன மிருக்கையில் தருமபுத்திரன் முதலானோர், கண்ணபிரானைத் துவாரகையினின்று வரவழைத்து, மன்னர் பலரும் புடை சூழ இனிதிருந்து, தாங்கள் இராச்சியம் பெறும் உபாயத்தை யோசிக்கலாயினர்.

ஸ்ரீகிருஷ்ணன் அவர்களை நோக்கி, "வெற்றி வேந்தீர்! சூதினால் இழந்த பொருளைச் சூதினால் பெறுவது வழக்கமாயினும், முன்னம் குறித்தபடி துரியோதனன் இராச்சியம் தாராணகில், பின்பு போர் புரிந்தாகிலும் பூமியைப் பெறவேண்டும். அவன் இப்பொழுது கொண்டிருக்கும் எண்ணத்தை யாம் அறியவேண்டு மன்றோ? ஆதலால் தூது விடுத்து அவன் கருத்தை முதலில் அறிவீராக," என்று உபாயம் கூறித் தாம் துவாரகைக்கு ஏகினர்.

கார்வண்ணன் கூறிய மொழியைக் குரு வசனமாகக்கொண்டு, தருமபுத்திரன் அவ்வாறே செய்யத் துணிந்து, 'துரியோதனனிடம் தூது போவார் யாவாரே?' என ஆய்ந்தறிந்து, தம்முடைய புரோகிதனாகிய தௌம்மியனை அழைத்துத் தம் கருத்தை வெளியிட்டு, அரவக்கொடியோன்பால் தூது விடுத்தனன். அம் முனிவனும் அங்ஙனமே சென்று தூதின் செய்தி கூறி, நாடு வேண்டுகையில், துரியோதனன் சீற்றம் மேற்கொண்டு இராச்சியம் கொடுப்பதில்லை என்று மறுத்துக் கூறினன்.

அச்சமயம் ஆங்கிருந்த விதுரர், பீஷ்மர், துரோணர், கிருபர் முதலான பெரியோர்கள், அக்கண்ணிலான் மைந்தனுக்குப் பற்பல நீதி மொழிகள் கூறி, ஐவர்க்குரிய தாய பாகத்தைத் தருமாறு வற்புறுத்தினர். அக் கொடியோன், அம் மேலோர் மொழியைச் சிறிதும் ஏற்றுக் கொள்ளாது பழித்தெறிந்து, அன்னோர் மனத்தைப் புண்படுத்தினன். ஒழுக்கம் மிக்க அப் பெரியோர்கள், அத் தீயோன் சபையை வெறுத்து வெளியே போய்விட்டனர்.

அரவுயர்த்தோன் நாடு தர உடன் படாமல் உரைத்த வார்த்தைகளைக் கேட்டுத் தௌம்மியன், மீண்டும் உபப்பிலாவிய நகரம் வந்து, தருமபுத்திரனைக் கண்டு, தூதின் செய்தியை ஆதியோடந்தமாய் அறைந்தனன். தருமன், அப்புரோகி

தனை நோக்கி, 'முனிவர் பெரும! நீர் இனித் துவாரகைக்குச் சென்று, ஸ்ரீ வாசுதேவனைக் கண்டு, உற்றவை யாவும் உரைப்பீராக,' என்று வேண்டிக்கொண்டனன்.

அம்முனிவன் அங்ஙனமே துவாரகைக்குப் புறப்பட்டு, வழியை அரிதிற் கடந்து, அப்பதி புகுந்து, பரந்தாமனைக் கண்டு, தாம் துரியோதனனிடம் தூது சென்றமையும், அவன் நாடு தர மறுத்தமையும், பீஷ்மர், துரோணர், விதுரர் முன்னிட்ட சான்ருேர் அவனுக்கு நீதி மார்க்கம் உரைத்தமையும், அவை யனைத்தும் பயன் படாமற் போனமையும், மற்றும் உற்ற வார்த்தை யெல்லாம் விவரமாய் எடுத்துரைத்து விடை பெற்று உபப்பிலாவியம் மீண்டனன்.

அந் நகரத்தில் இருந்த பாண்டவர்கள், "போர் புரிந்தே பார் பெறவேண்டும் போலும்!" எனக் கவன்று வருந்தி, படை கூட்டத் தலைப் பட்டனர். அஃது அறிந்ததும் கௌரவர்களும் போர் நேருமெனும் அச்சத்தால் மன்னர் பலர்க்கு திருபம் போக்கிப் படை திரட்டமுற்படலாயினர்.

போரில் தங்களுக்குப் படைத்துணை செய்யுமாறு கண்ணபிரானை வேண்டக் கருதி, துரியோதனனும் அருச்சுனனும் துவாரகைக்கு ஏக காலத்தில் சென்றனர். அன்பர்களை ஆதரிப்பதற்கென்றே அவதரித்த கண்ணபிரான், தமது

திவ்விய மாயையால் நுண்ணிய சூழ்ச்சியை மேற்கொண்டு, துரியோதனனுக்குத் தமது யாதவ சேனை முழுமையும் துணை யனுப்புவதாகக் கூறினர்.

பின்பு அப்பெருமான் அருச்சுனனுடைய வேண்டுகோளுக்கிரங்கி அவனுக்குச் சாரதியாக இருக்க உடன்பட்டனர். துரியோதனன் ஓர் அக்குரோணி யாதவசேனையோடு அத்திநபுரம் புகுந்து, தந்தை திருதராஷ்டிரனைக் கண்டு அடிபணிந்து, செய்தி கூறிப் போரினை எதிர்பார்த்திருந்தனன். அருச்சுனனும் கண்ணபிரானைத் தேருரும் பாகனுகப் பெற்று மகிழ்ந்து, அவரை உடன்கொண்டு உபப்பிலாவியம் நண்ணினன்.

"ஆயனுடன் பார்த்த னணிநெடுந்தேர் மேற்கொண்டு
தூய தருமன்றன் றொன்னகர்க்குப்—போயவரும்
கானுறுங் குன்றுகளும் கைகடந்து சென்றடைந்தார்
வானுறு மாமுகில்போன் மற்று." (பாரத வெண்பா)

---

## 3. ஐவர் ஆலோசனை

கண்ணபிரான், தருமபுத்திரன் கோயில் எய்தி, அங்கு ஒரு தனி மண்டபத்தில் பாண்டவர்களும், பாஞ்சால ராஜனும், விராட ராஜனும், குந்திபோஜராஜனும் புடைசூழ வீரசிங்காதனத்தில் வீற்றிருந்தனர். இவ்வகை இருந்த அப்பெருமான், பாண்டவர்களை நோக்கி அருளிச் செய்வாராயினர் :—

கண்ணபிரான் :—“ நீங்கள் துரியோதன னுடன் யுத்தம் செய்து இராச்சியம் கொள்ள விரும்புகிறீர்களா ? அல்லது அது முடியா தாகில் முன்போல் வனவாசம் செய்ய விரும்பு கிறீர்களா ? உங்கள் உட்கருத்து யாது ? துரி யோதனனுடன் நீங்கள் போர் தொடங்குவ தாயின், அதற்கு யான் செய்யத்தக்கது இன் னது என்று யோசித்து உரைப்பீர்.”

தருமபுத்திரன் :—“ பெருமானே ! போர் மூளின் இரு திறத்தவரும் மாள்வோம் ; யாங்கள் ஒருவரோடொருவர் பகையின்றி வாழும்படி சமாதானம் உண்டாகுமாறு தேவரீர் அவர்க ளிடம் தூது செல்ல வேண்டுகிறேன்.”

கண்ணபிரான் : — “ துரியோதனனுடன் இரண்டாம் முறை சூதாடி அவ் வாட்டத்தில் நீங்கள் சயித்த அந்நாள் அவன் சொன்ன விரதமொழி தவிராமல் வெங்கானம் போய் மீண்டீர். அக்கொடியோன் உங்கள் குரு நிலத் திற் பாதியும் இனிக் கொடாதிருந்தால், அவ னைப் போரில் கொன்று, இரு திறத்தாருடைய இராச்சியத்தையும் நீங்களே ஆளத் துணிவது தான் உங்கள் கடமையாகும்.”

தருமபுத்திரன் :—“ நாங்கள் போரில் வெல் லும் உபாயம் எப்படி ? விற்போரில் வல்ல விது ரர் நூற்றுவரின்பக்கம் இருக்க, நாங்கள் வெற்றி கொள்ளக்கூடுமோ ? என் செய்வது ?

கண்ணபிரான் :—“ நமது நகுலன் பரி மீது இவர்ந்து போர்க்களம் குறுகின், அம்ம! பதினான்கு உலகங்களும், இடம் விட்டுப் பெயர்ந்து நடுங்குமே! அப்பொழுது விதுரனது வில் இவன் எதிர் நிற்குமோ?”

தருமபுத்திரன் :—“ தேவதேவ! எங்கள் ஆசிரியர் துரோணாசாரியரது புத்திரனாகிய அசுவத்தாமன் அப் பக்கத்தில் நின்று சேனாதிபதி ஆவானாயின், அதற்கு யாங்கள் ஏது செய்வோம்? அவனை வெல்வது சிவபெருமானுக்கும் அரிதாகுமே! அவனை வெல்லும் வகையும் ஒன்றுண்டோ?”

கண்ணபிரான் :—“ நமது சகாதேவனை இப்பக்கத்தில் சேனாதிபதி யாக்கின், அவன் அசுவத்தாமனைப் போர்க்களத்தினின்றும் தட்டாமல் துரத்தி விடுவான்.

தருமபுத்திரன் :—“பிறக்கும்போதே கவச குண்டலத்துடன் தோன்றித் துரியோதனனுக்கு உற்ற தோழனும் துணைவனுமாகிய கன்னனைப் போரில் புறங்காண்பது எப்படி? தேவேந்திரனன்றி வேறு எவரால் அச்சூரிய புத்திரனை வெல்லக்கூடும்?”

கண்ணபிரான் :—“கன்னன் கவசத்தைப் பிளப்பதற்கு நமது குழந்தை அபிமனது கையிலுள்ள வில்லே சாலும். இதனை மனத்திற் கொள், கவலை வேண்டாம்.”

தருமபுத்திரன்:—“துரியோதனன் கக்ஷியில் நிற்கும் பீஷ்மரது கையிலுள்ள காலசக்கரம் போரில் எதிர்த்துவரின், அதனை எவராலும் தாங்கமுடியாதே! அதற்கு யாது செய்வோம்?”

கண்ணபிரான் :—“தரும! நீ ஏன் இங்ஙனம் சிந்திக்கின்றனை? சுத்த வீரர் எதற்கும் அஞ்சார். அன்றியும் பீஷ்மசக்கரம் வருங்கால் அதற்குத் தக்க பரிகாரம் அப்பொழுது நாம் செய்து கொள்ளலாமன்றோ? போர்க்களத்தில் அருச்சுனன் அருந்தேர்மீது யாம் இருப்போமன்றோ? உனக்கேன் இக்கவலை?”

தருமபுத்திரன் :—“ எம்பெருமானே! தேவரீர் இதுகாறும் எங்கட்குச் செய்த உதவிகளை மறவோம். உமது துணையிருக்க எங்களுக்கு யாதொரு குறையு மில்லை. குரு குலத்தில் தோன்றிய எமக்குத் தாயும் தந்தையும் தேவரீரே; பகைமூண்டு யாங்கள் போர்க்களம் நண்ணிமடியாமலிருக்கத் தேவரீர் துரியோதனனிடம் சென்று தூதுபேசி, எமது தாயபாகம் வேண்டுக; தரின், உவகையோடு கொண்டு மீள்க.”

தருமபுத்திரன் இங்ஙனம் பேசுகையில் அங்கு அருகிருந்த பீமன், மூத்தோனை நோக்கி, “என் இவ்வீண்மொழி! துச்சாதனன் அந்நாள் தேவியைக் கூந்தல் பற்றிச் சபைமுன் இழுத்தபோது, துரியோதனன் கூறிய வசை மொழிகளை நீர் மறந்தீரோ? அச்சமயத்தில் நமது கண்கள்

முன்பாகப் படாதபாடு பட்ட பாஞ்சாலி, கடுஞ் சபதம் மேற்கொண்டு, சாந்து மணிப்பூண் முத லிய கோலந் துறந்து, தலைவிரிகோலமாய்ச் சூள் முடியுங் காலம் எப்பொழுதோ என்று காத் திருக்கின்றனள். இதனை நீர் முற்றும் மறந்து இப்போது துவாரகாதிபதியைத் தூதுவிடுவது கேட்போர்க்கு நகையாகுமன்றோ? நமது இராச் சியத்தைத் துரியோதனன் மாயச்சூதினால் வஞ் சித்துக் கைகொண்டான். அதனை வேண்டி யாம் முன்னம் ஒரு தூது விடுத்தும், அவன் இசைந் திலன். அவனைப் போரில் கொன்று, குருநாடு முழுமையும் யாமே கொள்வதன்றி, வன்மை யற் றவர்போல் மண்ணிரந்து அவனிடம் மீண்டும் தூதுபோக விடுதல், விறல் மன்னர்க்கு மாண்பா குமோ! உம்முடைய உத்தரவை யான் பெறுவே னுயின், ஒரு நொடிப் பொழுதில் நூற்றுவரைத் தொலைத்து வாகை சூடி மகிழ்வேன்," என்று சினந்து கூறினன்.

பொறுமையிற் பெரிய தருமபுத்திரன், வீமன் கூறிய வீரமொழிகளைக் கேட்டு, "ஆற்றல் மிக்க பீம! உற்றுரை யெல்லாம் யாம் உடன்கொண்டு நன்னட்புடன் அரசாளப் பெறுவோமாயின் அதனினும் சிறந்த ஆனந்தம் வேறு யாதுளது? சுற்றத்தார் அனைவரையும் தொலைத்து வாழ்தலில் யாது பயன்? தனி மரம் தோப்பாகா தன்றோ?" எனச் சாந்தமொழி கூறினன்.

தமையன் கூறிய மொழிகளால் பீமன், மூண்ட சினத்தனுய், "அண்ண! பகைவர் புரிந்த வஞ்சனை பழி பாவங்கள் முற்றும் மறந்து, நீர் தருமமே விரும்புகின்றீர். தருமம் என்பதில் அடங்கியது பொறை யொன்று தானே? எனது சபதத்தை யான் முடிப்பது என்ருே? எனது படைவலியும் தோள்வலியும் வீணுகின்றன என்பதையும் நீர் நினைந்திலீர். உம்மோடு பிறக்க எனக்கு விதியிருந்ததன்ருே!" என்று வெறுத்துக் கூறிக் கையில் ஏந்தியிருந்த தண்டாயுதத்தைத் தரைமீது எறிந்து, நெட்டுயிர்ப்பு விட்டு ஏங்கி நின்ருன்.

இங்ஙனம் சீற்றங் கொண்ட பீமனைத் தருமன் கை கவித்து, "போர் ஏறே! குற்றம் பார்க்கின் சுற்றம் இல்லை; தம்பியர் அவமானம் செய்தால் தீங்குண்டோ? கண்மலரில் கை படின் கோபித்துக் கையைத் துண்டித்தல் தகுதியுடைத்தோ? ஒத்து வாழ்வதினும் உயர்ந்தது எது? துரியோதனன்பால் எம்பெருமான் தூது போய், அவன் மனக்கருத்து அறிந்து வருமளவும் நீ பொறுத்திருப்பாயாக," என்று கூறித் தணித்தனன்.

அதன்பின் முரசுயர்த்தோதன், முகுந்தனை நோக்கி, "இறைவ! தேவரீர் அரவுயர்த்தோன்பால் போய், நீதி மார்க்கங்களை நன்கு உரைத்து, எமது தாய பாகத்தை வேண்டுக; தாராணுகில்

அர்த்த ராச்சியம் கொடுப்பினும் கொண்டு போதுக; அதுவும் கொடாது ஐந்துவீடு தரினும் பெறுக; அதற்கும் இசையானுகில் யுத்தத்திற்குச் சன்னத்தனு யிருக்கும்படி, பீஷ்மர் துரோணர் விதுரர் முதலானோரைச் சாக்ஷியாக வைத்து, அவன் வாய்மொழி தவறின்மையும் அறிய உரைத்து, ஈண்டு எழுந்தருள்வீராக," என்று பிரார்த்தித்தனன். கண்ணபிரான், அன்பர்களது சொல்லைச் சிந்தையிற்கொண்டு மகிழ்ந்து, அங்ஙனமே தூதுபோக உடன்பட்டனர்.

ஆண்டு அருகிருந்த அருச்சுனன், தருமனை நோக்கி, "அண்ண! ஏன் இவ் வீண் முயற்சி? கண்ணன் எனது தேர்மிசை இருந்து வடிக்கயிறும் முட்கோலும் பிடித்துப் பாங்கினுடன் வெண்பரி நான்கினையும் தூண்டுவனேல், என் கையிலுள்ள காண்டீபத்தை நாணேற்றி அம்பு தொடுத்துத் துரியோதனனையும், அவன் உடன் பிறந்தாரையும், பிற பார் மன்னரையும் நொடிப் பொழுதில் மாய்த்து யமபுரிக்கு அனுப்புவேன். என் கையில் சிலை இருப்பதையும் கருதவேண்டாவோ? குருநாட்டுக்குரிய நாம் இரத்தலும் கூடுமோ? அது இழிவன்றோ? நிருபர் பலர் நகையாரோ? முன்னாள் வாரணபதியில் அரக்கு மாளிகையில் நம்மை வைத்து அனல் மூட்ட முயன்ற அத் தீயோனையும், அவனை அடுத்துளாரையும் கடுங் கணை பாய்ச்சி, நடுங் கமருள்

வீழ்த்தி, குருதிப் புனலில் குளிப்பித்து, கர்ணனை யும் காண்டீபத்துக்கு இரையாக்குவேன். இனி யும் தூது செல்ல வேண்டுமோ? அத் தீயோன் நீதிமார்க்கத்திற்கு உடன்படான். பாம்பிற்குப் பால் வார்த்து வளர்க்கினும் வாதை பண்ணும் வல்விடமே அதற்கு வளருமன்றோ?" என்றான்.

பார்த்தன் இங்ஙனம் கூறியதைக் கேட்டுக் கண்ணபிரான், "அருச்சுன! முன் பிறந்தோர் கூறுவதைப் பின் பிறந்தோர் கேளாது மறுப் பரோ? தாதைக்குச் சமமன்றோ தமையனும்? நீ கடுங் கோபம் தணிக," எனப் புகன்று கை கவித்துத் தூதுபோக ஒருப்பட்டனர்.

அப்பொழுது நகுலன், ஸ்ரீ வாசுதேவனை வணங்கி, "யதுகுல திலக! திரௌபதி துகி லுரியப்பட்ட அந்நாள் முதலாகக் கூந்தல் முடி யாமையை நினைக. மன்னவையில் எங்கள் எதி ரில் திரௌபதியைத் துகில் உரிந்த அக் கொடி யோனிடம் இரந்து சென்றால், உலகம் நம்மைப் பழிக்கும். முன்னம் கூறியபடி நாடு தர உடன் படாத நூற்றுவர்பால் செரு வேண்டிப் போகா மல், மீண்டும் தூது போதல் நலமோ? தான் அறியாதவன் பிறர் போய்க் கற்பித்தால் அறி வனோ?" என்று உருக்கமாகக் கூறினன்.

இவ் வகை சொல்லிய நகுலனையும் கை யமர்த்தி அடக்கிய மா மாயனை நோக்கிச் சக தேவன், "தேவ தேவ! நீர் அத்திநபுரத்திற்குப்

போகின்ற காரணமும், உமது மகா மாயமும், நும் திருவுள்ளக் குறிப்பும், பிறவும் இங்கு அறி வார் யார்?" என்றான். எனலும் கண்ணன் அவனை உற்று நோக்கி, "சொலற்கரிய புகழு டையோய்! நின் கருத்துத்தான் யாது? தெளிய உரை," என்று வினவினர்.

அதற்குச் சகதேவன், "அரசர் கோவே! எனக்கென்று ஏதேனும் ஒன்றுளதோ? உமது திருவுள்ளக் கருத்தே எனது கருத்தும் ஆகும்; நும் கருத்தே முற்றுவிப்பீராக," என்று கூறி னன். சகதேவன் இங்ஙனம் தந்திரமாகச் சொல்லியதும் மாயோன் முறுவலித்து, அவனை ஏகாந்தமாக ஒரு தனிமண்டபத்துள் அழைத் துச் சென்று, "கூர்மதியோய்! பாரதப் போர் நடவாமல் யாவரும் பிழைத்து வாழ நீ ஒருபா யம் சொல்வாய்," என்று கேட்கச் சகதேவன் அவரைத் தொழுது சொல்வான்:—

"நீபாரத அமரில் யாவரையும் நீறாக்கிப்
பூபாரம் தீர்க்கப் புரிந்தாய், புயல்வண்ணா!
கோபாலா! போரேறே! கோவிந்தா! நீயன்றி
மாபாரத மகற்ற மற்றார்கொல் வல்லாரே?"

"பாராளக் கன்னன், இகல்பார்த்தனைமுன் கொன்ற
காரார் குழல்களைந்து, காலில் தளைபூட்டி, [ணங்கின்
நேராகக் கைப்பிடித்து நின்னையும்யான் கட்டுவனேல்,
வாராமல் காக்கலாம் மாபாரத மென்றான்.

(வில்லி பாரதம்)

இங்ஙனம் சகாதேவன் யுக்தியுக்தமாகச் சொல்லிய வார்த்தைகளைக் கண்ணபிரான் கேட்டு அதிசயித்து, மீண்டும் அவனை முக நோக்கி, "அன்ப! நீ முன்னம் கூறியவை எல்லாம் முடித்தாலும், என்னைக் கட்டும் வகை எப்படி? உன்னால் கூடுமாயின் என்னைக் கட்டுக," என்று கூறிப் பதினாறுயிரம் திருஉருவங்களை அங்கு ஒரே சமயத்தில் எடுத்துக் கொண்டனர்.

தூய மனத்தனான சகதேவன், 'மார்வ மென்னும் கோயில் அமைத்து, மாதவனென்னும் தெய்வத்தை நாட்டி, ஆர்வ மென்பதோர் பூவினை இட்டு,' பகவானைத் தியானித்து, அவ் வடிவுகட் கெல்லாம் ஆதி மூலமான திருவடிவத்தை ஞானத்தால் உணர்ந்து, அவனுடைய திருவடிகளைத் தன் கருத்தினால் கட்டினான்.

பத்துடை அடியவர்க்கு எளியனான திருமால், அப்பொழுது அவனது சக்திக்கும் பக்திக்கும் உவந்து கட்டுண்டு, தாம் கொண்ட எல்லா உருவங்களையும் மறைத்து, உண்மை உருவத்துடன் விளங்கி, "சகதேவ! பக்தியினால் இன்று நீ என்னை அறிந்து பிணித்தமை நன்று; நீ வேண்டும் வரம் தருவோம்," என்று உரைத்தனர்.

அதன்பின் சகதேவன், "நெடுமாலே! உம்மைச் சேர்ந்துள்ள எங்கள் ஐந்து பேரையும் வன் பாரதப் போரில் காத்து அருள் புரிவீராக," என்று பன்முறை நயந்து வேண்டினன்.

கண்ணபிரான், 'அப்படியே ஆகுக,' என்று அவனுக்கு வரம் தந்து, "அன்ப! இன்று இங்கு நாமிருவரும் பேசிய இரகசிய மொழி களைப் பிறர் எவர்க்கும் அறிவியா திருப்பாயாக," எனப் பணித்துப் பின்னர் அத் தனிமண்டபத் தினின்று நீங்கி, சகதேவனை உடன்கொண்டு தரும புத்திராதியோர் எதிரில் வந்து சேர்ந்த னர். மாயவனது திருவுள்ளக் குறிப்பை உள்ள படி அறிந்த சகதேவன் ஆண்டிருந்தோரை நோக்கி, "சமாதானமே மிக இனிது," எனப் பெரிதும் மகிழ்ந்து உரைத்தான்.

அவ் வார்த்தையைக் கேட்டிருந்த திரௌ பதி, கண்ணீர் சோரக் கண்ணன் எதிரில் வந்து, அவர் கழலிணைகளைத் தொழுது, "என் மானம் காத்த மாதவனே! அடியேற்கு வாய்ந்திருக்கும் கணவர் ஐவரும் ஆண்மையில் நிகரற்றவர் என்பது நுமது திருவுள்ளம் அறிந்த விஷ யமே. ஆயினும் அவர்கள் உதவி அன்றைக்கு இம்மியேனும் கிடைத்ததோ? தேவரீர் கருணை செய்யாவிடில் என் கதி யாதாயிருக்கும்? வேதங் களாலும் அறிய முடியாத திருவடிகள் சிவப் பேறத் தேவரீர் தூதுக்கு எழுந்தருளலும் கூடுமோ? விரித்த இக்கூந்தலை யான் முடிப்பது இனி எப்போது? என் இவ் வீண் முயற்சி?" என்று மொழிந்து, விம்மிவிம்மிப் புலம்பினள். கண்ணபிரான் அவள் மீது அருள் கூர்ந்து,

"உன்கருத்தே முற்றுவிப்பேன் ஒள்நுதலாய் ஒள்திறலான்
தன்கருத்தை யான்சென்று சந்தித்தால்-பின்சடையால்
இக்குழலை நீமுடிக்க வேந்தெழிலான் தேவிமார்
அக்குழல்கள் தாம்விரிப்பா ராங்கு." (பாரத வெண்பா)

என வாக்களித்துத் துயரம் தணித்தனர். இவை யாவும் கண்ணுற்ற தருமன், ஸ்ரீவாசுதேவனை நோக்கி, "பெண்டிரும், பிள்ளைகளும், பித்தர்களும் என்ன அறிவார்? அன்றியும் நோயுள்ளோர், துறவிகள், சினம் மிக்கோர், கல்லாத மூடர், பெண்கள், சிறு பிள்ளைகள், நீதி முறை அறியாதார் ஆகிய இன்னோர், மந்திராலோசனை சபைக்கு வரத் தகாதவர் ஆவர். ஆகையால், பெருமானே! தேவரீர் தூது செல்வீராக?" என்று மீண்டும் பிரார்த்தித்தனன்.

மண் முழுதும் உண்ட பிரான், தருமனது வேண்டுகோட்கு இசைந்து, துரியோதனன் பால் மண் வேண்டப் பாண்டவதூதனாய் மணி நெடுந்தேரேறிப் பெரியோர் பலர் புடைசூழ, முரசம் முதலிய இசைக் கலன்கள் முழங்க, மணிக்கவரி அருகிரட்ட, வெண்குடை மேல் நிழற்ற, விண்ணவர் பூமாரி பொழிய, பிரயாணம் மேற்கொண்டு காடும் நாடும் மலையும் கடந்து, இரண்டுநாள் இடைவழியில் தங்கி, மூன்று நாள் அத்தி நகரம் எய்தினர்.

---

## 4. விதுரர் விருந்தளித்தல்

ஸ்ரீவாசுதேவன் எழுந்தருள்வது கேட்டுத் துரியோதனன் பெருமகிழ்ச்சி கொண்டு, அத்திநபுரியைச் சிறக்கக் கோலம் செய்வித்தான். அந் நகரமாந்தர் வீதிகள்தோறும் பூவும் நீரும் பொழிந்தனர்; பொதுவிட மெங்கும் புதுமணல் பரப்பினர்; எங்கும் பந்தல் நாட்டிக் கதலியும் கமுகும் கட்டினர்; மாடமண்டபங்களை வண்ணத் துகிலாலும் மணிமாலையாலும் அலங்கரித்தனர்; ஆடரங்குகளிலும் மாடவீதிகளிலும் ஆடலொலி பரப்பினர்; தூப தீபங்களை எங்கும் செவ்வனே நிறைத்தனர்.

இத்தகைய கோலம் கண்டபின் துரியோதனன், அழகு மிக்க ஒரு மண்டபத்தில் ஸ்ரீவாசுதேவனுக்கு ஆன கோயிலிடம் குறித்து அழகு செய்து மற்றும் வேண்டியவை யெல்லாம் விளைப்பித்து, பின் தான் உயர் கலன் பூண்டு, வெண்பட்டு உடுத்து, நாற்படை புடைசூழ, வெண்சாமரம் அருகிரட்ட, கொற்றக் குடை நிழல் கவிப்ப, அரவக்கொடி விசும்பு அணுக, பல்லியங்கள் பல ஆர்ப்ப, அரசர் பலர் அருகிருந்து போற்ற, பீஷ்மர், துரோணர், விதுரர், கர்ணன், முதலானோரை உடன்கொண்டு ஸ்ரீ வாசுதேவனை எதிர் கொள்ளப் புறப்பட்டான்.

இராசராசன் துரியோதனன் இங்ஙனம் பிரயாண மாகுங்கால், கொடுமை மிகுந்த சகுனி அவனை நோக்கி, "வேந்தே! பாண்டவர்க்குத் தூதாகி உரிமை வேண்டுதற்குக் காரணனுய்வரும் ஆயனை நீ பரிவினுல் சென்று காண்பையேல், பயத்தினுல் சென்று கண்டாயென்று பார்மன்னர் கருதுவர். நீ அம்மாயனை எதிர்கொள்ளக் கடவையல்லை," என எடுத்துரைத்து, அவன் மனத்தைக் கலைத்தான். துரியோதனன் சகுனி சொல்லைக் கேட்டு மிகவும் அளவளாவி உடன்பட்டு, வியாகுலத்தோடு உடனே மீண்டுபோய்த் தன் கோயில் புக்கான்.

ஸ்ரீ வாசுதேவனை எதிர்கொள்ளாம லிருப்பது யாவர்க்கும் நன்மையல்ல வெனக் கருதி, பீஷ்மர், துரோணர், விதுரர், கிருபர், கர்ணன், அசுவத்தாமன் உள்ளிட்ட வேந்தர்பலர் சென்று அவரை எதிர் கொண்டு அடிபணிந்து சூழ்ந்து நின்று நல்வரவு கூறி மகிழ்ந்திருந்தனர்.

கண்ணபிரான் தமது கமலக்கண்ணுல் அவர்களை அருளுடன் நோக்கி, பார்வேந்தனைக் காண நாளும் குறிப்பிட்டுப் பல்வகைச் சிறப்புடன் விதுரர் மாளிகையை நாடி அங்குச் சென்றனர். பரம பாகவதராகிய விதுரர், கார்வண்ணன் எழுந்தருளினமைக்காக உள்ளம் குளிர்ந்து, "தேவ தேவன், சக்கரபாணி, யாவர்க்கும் காண அரியான், பக்தவற்சலன், ஸ்ரீவாசுதேவன், தரும

புத்திரன் பொருட்டுத் தூதாக வந்து, நாயேன் புன்குடிலை நண்ணினமையால் யான் புனிதனுனேன். என் கொட்டில் கோயிலாகப் பெற்றது. யான் இம்மை மறுமை இரண்டினையும் ஒருங்கே பெற்றேன்,'' என்று இவ்வகை கூறித் துதித்து, மாயோன் இணை அடிகளைத் தொழுது, செய்வ தொன்றறியாது, மெய்ம்மறந்து மகிழ்ந்து, தம் இறப்பையும் பிறப்பையும் பிரித்தனர்.

“ தீப்பறக்குஞ் சக்கரக்கைச் செங்கண்மா லென்னுடைய
நாய்க்குடிலி லேநுழைந்தான் நானுயர்ந்தேன்—வாய்த்த
பிறப்பைக் கழித்தேன் பெரும்பதம்பெற் றேனென்று
இறப்பைப் பிரித்தா னெழுந்து.'' (பாரத வெண்பா)

பாற்கடலைக் கடைந்து அமரர்க்கு அமுது அளித்து விருந்திட்ட விமலன், தம் குடிலில் விருந்து வந்தமைக்காக விதுரர் பேரானந்தம் கொண்டு, கண்ணபிரானுக்கும், அவருடன் வந்த பரிவாரங்களுக்கும் நால்வகை உண்டியோடு நல் விருந்தளித்தனர்.

விதுரரது மனையில் கண்ணபிரான், அன்புடன் விருந்து உண்டு இனிது இருந்த பொழுதில், சூரியன் குடதிசைக் கடலில் படிந்தான். குடபால் எங்கும் சிவந்தது. அவ்விரவு விதுரர் சக்கரபாணியை அணுகி ஏகாந்தமாய், “சுவாமீ ! கருணைக் கடலே ! தேவரீர் இங்குத் தனியே எழுந்தருளின காரணத்தை உரைப்பீராக,'' என்று பிரார்த்தித்தனர். அப் பெருமான்,

"அன்ப! வன வாசம் செய்து கழிக்கவேண்டிய நாட்களைக் கழித்து, இப்போது வெளிப்பட்டு வந்துள்ள பாண்டவர்க்கு இக் குருநாட்டில் உரிய பாகம் கேட்பதற்கு யாம் தூதாய் வந்தோம்," என்றனர்.

அவர் அங்ஙனம் கூறுகையில் விதுரர், "மாதவனே! நியாயமாகத் துரியோதனன், ஐவர்க்குரிய தாய பாகத்தை உதவான். அவனைப் போரில் கலக்கினு லல்லது அவன் வழிக்கு வாரான்," என்று சொல்லினர். கண்ணபிரான் அது கேட்டு, "விதுர! குருநாட்டை ஆளும் துரியோதனன், நாளைக்கு இராச்சியத்தைப் பாண்டவர்க்குக் கொடானுகில், இருதிறத்தார்க்கும் வெம்போர் நேரும்; யாம் என் செய்வது? உறவினர் நயந்து கேட்டால் நிருபர் கொடார்; அவ் வுறவினர் அம்பு தொடுத்து இரணம் கொடுத்தால், கேட்டவை யாவும் பயந்து கொடுப்பார்; இது இவ்வுலக இயல்பு," என்று இயம்பி, விதுரர்க்கு விடை கொடுத்தருளி, நாண்மலர்ப் பாயல்மீது கண்வளர்ந்தனர்.

"இவ்வீடுனை தெனதே யென்றருளிப் போய் விதுரன்
மெய்வீட்டி லுண்ண மிகவிரும்பிப்—பொய்வீ
டினிது செய்யும் பாண்டவர்க்கா யெம்பெருமா ளாங்கே
அமுதுசெய்து கண்வளர்ந்தா னங்கு. (பாரத வெண்பா)

---

## 5. பாண்டவதூதனும் துரியோதனனும்

மறுநாட்காலை அமலன் அமளி விட்டெழுந்து துரியோதனனிடைக்குப் போகத் துணிந்தனன். இதற்குள் கதிரவனும் குண திசையில் தோன்றினன். அதன் பின் ஸ்ரீ வாசுதேவன் சர்வாலங்காரம்புனைந்து, விதுரரை அழைத்துத் தேர் கொண்டுவரப் பணிக்க, அவரும் விரைவில் அங்ஙனமே கொணர்ந்தனர்.

"ஒற்றை மணித்துகிரு ஞென்றுரிய வொன்று தவிக்
கொற்றவேற் பாஞ்சாலன் கோமகளை—யற்றம்
அறுத்தவனே மாவலிபான் மண்ணனைத்தும் வாங்கச்
சிறுத்தவனே போந்தேறு தேர்." (பாரத வேண்பா)

ஐவர்க்குத் தூதாகி வந்த நம் பெருமான், அத்தேரின் மீதேறித் துரியோதனன் அரண்மனையைக் குறுகலும், ஆண்டிருந்த வாயிற் காவலர் உள்ளே சென்று துரியோதனனைக் கண்டு முகில் வண்ணன் வரவை உரைத்தனர்.

அப்பொழுது அம் மன்னவன், செருக்குச் சிறிதும் குன்றுமல் பல்வகைச் சிறப்புடன் வீர சிங்காதனத்தின் மீது கொலுவீற்றிருந்து, தனது சபையிலுள்ள அரசர்களை நோக்கி, "வீரர்களே! போர் விரும்பும் பாண்டவர்க்குத் தூதாய்க் கோபாலன் இன்று நம் முன் இங்கு வருவான். நீங்கள் அவ் விடையனைக்

கைதொழுது வாழ்த்து வீரேல், அவனிடத்து அச்சத்தால் நான் அங்ஙனம் செய்வித்த தாகத் தோன்றி அது பழிக்கு இடமாகும். அங்ஙனம் செய்யின் உங்கள் ஊர்களைத் தீயிட்டு எரிப்பேன். இதனை மறவன்மின்," என்று சினந்து கூறினன். இரும்பை இழுக்கும் காந்தம்போல் அவர்கள் மனம் இழுப்புண்டமை யால், அன்னோர் ஒன்றும் புரிய இயலாது, தங்கள் பரிதாப நிலைமையை நினைந்து வருந்தி, அக் கொடியோன் விருப்பத்திற்கு இசைத்தனர்.

அதன்பின் துரியோதனன், பாண்டவ தூதனை அரண்மனைக்குள் வரவிடக் காவலர்க்குக் கட்டளையிட்டு, வெள்ளிக்குடை நிழற்ற, வெண் சாமரம் இரட்ட, மாமுடி மன்னர் போற்ற, வெள் ளிலை வேல்வேந்தர் இறைஞ்சக் கம்பீரமாக வீற் றிருந்தான். அப்பொழுது அந்தணர் பலர் அவன்மீது மலர்கள் தூவி ஆசி கூறினர்.

தேவேந்திரன்போல் மிக்க சிறப்போடு கண்ணில்லான் மைந்தன் கொலுவிருக்கையில், கண்ணபிரான் அச்சபைக்கு வர, அம் மன்னன் அவர்க்கு யாதொரு வந்தனை வழிபாடும் இயற் ருது, தான் இருந்தபடியே கண்ணால் ஓர் ஆச னத்தைச் சுட்டிக்காட்டி அதன்மீது அவரை இருக்கச் செய்தனன். அப்பொழுது ஆங்கிருந்த பீஷ்மர், துரோணர், விதுரர், அசுவத் தாமன் முதலானோர் கண்ணனைக்கண்டு ஆனந்த

பரவசமாகிக் கைகூப்பி வணங்கினர்; வேல்வேந்தர் அடி தொழுதனர்; கன்னனோ தலை கவிழ்ந்திருந்தான். சகுனி கனன்று உளங் கருகிக் கை மறித்தான். இவ்வகை யிருந்தாரையும், கழல் பணிந்தாரையும், கைதொழுதாரையும், மற்றையோரையும், அடைவுகுலையாமல் கண்ணபிரான் கண்டருளி, அன்னோர் செய்தி யெல்லாம் தம் திருவுள்ளத்திற் கொண்டு, அமைதியுடன் மணியாசனத்து அமர்ந்தனர்.

இவ்வகை இருந்த விடத்து, ஸ்ரீவாசுதேவனை நோக்கித் துரியோதனன், "கோபால! நீ இங்குவருவது கேட்டு யான் என் அகத்தில் அறுசுவை அமுது சமைத்துக் காத்திருக்க, நீ வேற்றகத்தில் உண்டது ஏனோ?" என்று வினவினன்.

அதற்குக் கிருஷ்ணன் கருணையுடன், "நீ சாதுக்களையும் உறவினரையும் இகழ்ந்து வாழ்கின்றாய்; பாண்டவர்க்கு நாடு கொடாமல் நீதி மார்க்கம் கெட நீ பேசுகின்றாய்; உன் அகத்து உண்ணுவது தருமமாகுமோ? விதுரன் சர்வ ஞானியாய் நன்மார்க்கம் வழுவாமல், எவரையும் இகழாமல், இல்வாழ்க்கையும் இராச தருமமும் கொண்டுள்ளான்; அவ்விதுரன் உனக்கும் மற்றவர்க்கும் சிற்றப்பன் ஆகின்றான்; யானோ தரும புத்திரனுக்குத் தூதாய் உன்னிடம் வந்துள்ளேன்; கடன் அறிந்து காலம் கருதி, யாவும் செய்யவேண்டுமன்றோ? வந்த கருமம் முற்றாமை

யால் அவன் வீட்டில் போசனம் செய்தேன். அப் போசனமும் உன்னுடையதே யல்லவா?" என்றார். துரியோதனன், "மாயனே! நீ என்னிடம் தூதுவந்த காரணம் யாது," என்றான்.

கிருஷ்ணன்:—"வனவாசம் செய்து வருந்தி, ஒட்டிய காலம் கழித்துத் தீதின்றி வெளிவந்த தருமபுத்திராதியர்க்கு நீ இராச்சியம் கொடாமல் மறுத்து உரைப்பது நீதிமார்க்கமாகாது. அவர்களுக்குரிய தாயபாகத்தை உள்ளன்புடன் தருவையேல் நலமாகும்; தாராது ஒழிவையேல் பெரும் பழி நண்ணும். நன்மையும் தீமையும் நாடி நலம் புரிந்து ஆள்வாயாக.

*"தமராகித் தற்றுறந்தார் சுற்ற மமராமைக்*
*காரண மின்றி வரும்."* (குறள்)

துரியோதனன்:—"ஒட்டிய காலம் கழிந்திட்டால் தான் என்ன? போர் நேர்ந்தால் தான் என்ன? பகைவர்க்கு மண் கொடுப்பா ருண்டோ? யான் மயிர் முனைக்கும் மண் கொடேன். நீ யோசியாமல் பேசுகின்றாய்."

கிருஷ்ணன்:—"மன்னவனே! தனக்குரிமையான தரணி அனைத்தையும் தன் சிற்றவ்வை பயந்த தம்பிக்கு ஈந்தான் இப்பீஷ்மன்; இவன் பிறந்த குலத்திலேயே தோன்றிய நீ மட்டும் இங்ஙனம் கூறுதல் தகுமோ? குருகுலத்தவர் பெருமை இன்னதென்று இம்மியும் அறிகிலை."

துரியோதனன்:—"இருவர்க்குரிய நாடொன்றை ஒரே சமயத்தில் இருவர் ஆண்டாருண்டோ? செருவில் வலியார் வலியராய் மண்ணுள்வதே தகுதியாகும்."

கிருஷ்ணன்:—"ஐவர்க்கு உரிய பாகத்தைத் தாராயாகில், அவர்கட்கு ஐந்து ஊர் ஆகிலும் கொடுப்பையோ? ஐவர்க்கும் ஐந்தூர் கொடுத்து அவர்களோடு மனமொத்து வாழ்வையேல் மிகவும் இனிதாம். யான் சொல்வது உனக்கு மாறுகத் தோன்றுமாயின், அவர்கள் பின்பு உன் பாகத்தையும் பெற்று ஆள்வர்."

துரியோதனன்:—"ஆயனே! கேள்; ஐவர் எம்மோடு தாயம் கொண்டாட உரியவரல்லர். எனக்குப் பகைவரே ஆவர்."

கிருஷ்ணன்:—"ஐவர்க்கு அரசு கொடாமல் அடலாண்மை கொண்டு அவர்களை எதிர்க்க விரும்புகின்றாய் போலும்! உன் கருத்து இதுவாயின் குருக்ஷேத்திரத்தைச் சமர பூமியாகக் கொண்டு கடும்போர் புரிந்து உனது வீரத்தையும் உரிமையையும் நிலைநாட்ட எனக்கு இப்பொழுது கை அறைவாயாக."

கண்ணபிரான் இங்ஙனம் வேண்டியதும், துரியோதனன் கனன்று சீறி ஆசனம் விட்டெழுந்து அருகிருந்த தூணை ஓங்கி அறைந்து, "என்னே! இவ் விடையன், தன் பிறப்பையும் அறிந்தானில்லை; ஒருத்தி மகனாய்ப் பிறந்து, ஓர்

இரவில் ஒருத்தி மகனாய் ஒளிந்து வளர்ந்த தன் அழகையும், ஆயர்களோடு ஆனிரை மேய்க்கும் தன் இழி தொழிலையும் மறந்து இங்ஙனம் பேசினான். மாசிலா வாய்மை பொருந்திய நம் குரு குலத்தவர் பெருமையை இவன் அறியான். ஐவர் என்னுடன் போர்க்கு வரின், யான் அஞ்சுவேனோ? கரிகள் பகைகொண்டால், அரி அஞ்சி ஒடுங்குமோ? போர் செய்ய உடன்பட்டால், கை அறைய வேண்டுமெனும் நியாயம் எங்கு உளது? அங்ஙனம் செய்தல் அசத்தியவாதிகளின் தொழிலன்றோ? ஐவர்க்கும் உரிய திரௌபதியைக் குழல் பிடித்து மன்னவையில் இழுத்து வந்து துகிலுரிந்தபோது, அப் பாண்டவர்கள் ஒன்றும் செய்ய இயலாமல் பார்த்திருந்தார்கள் அன்றோ? பல இடங்களில் அலைந்து திரிந்து, பலர் இட்ட சோற்றை உண்டு, உயிர் சுமந்து, தோள்வலி குன்றிய அவர்களுக்கு மானத்தில் நோக்கமும் உண்டோ? அன்றியும் அவர்கள் பிறப்பும் ஒரு பிறப்போ? அவர்கட்குத் தந்தையர் ஐந்து பேராம்! அன்னையர் இருவராம்! இவர்களிடம் தோன்றிய ஐவரும் ஒரே பிறப்பில் ஒரே பெண்ணை மணந்து வாழ்கின்றார்களாம்! அவர்கள் என்னோடு குரு குலத்தில் பிறந்தாரென்று இவ் விடையன் வாய் கூசாமல் சொல்லத் துணிந்தனனே! வெகு நன்று! வெகு நன்று! பேராசை பிடர் பிடித்து உந்த ஐவர், நம்

குரு குலத்துரிமை பெற வந்தனரோ? கனவிலும் கிட்டாதுகாண்," என்றான்.

அதன் பின் கண்ணபிரான் ஆண்டிருந் தோரை நோக்கி, "என்னே! இவனே அரசாள் பவன்! இவனே என்னைப் பழிக்கும் தன்மை யன்! இவன் எனக்கு நேரோ? இவன் நாடு ஆள்வதை இனி யான் காண்பேன்!" என்று கடுகடுத்துக் கூறிப் போர் நேரிடற்குரிய காரியங் களெல்லாம் செய்துகொண்டு, அத்துரியோதன னது சபாமண்டபத்தை விட்டு வெளி வந்து, விதுரரது மாளிகை போய்ச் சேர்ந்தனர்.

துரியோதனனே தன் குற்றத்தைத் தான் அறிந்தானில்லை; புல்லோர் மனதில் நல்லோர் சொல் நிற்காதன்றோ? அரசன் ஒருவன், நீதி நூலைக் கல்லாமலும், விதித்தொழில்களைச் செய் யாமலும், பழிக்கு அஞ்சாமலும், குணம் பிறிதா கிச் செருக்குடன் இருப்பானாகில், அவனை வெல் லுதல் பகைவர்க்கு எளிதாகும். தூதரை அரசன் நன்கு உபசரித்து இனிய மொழி கூறாமலிருப் பது, அவன் கேட்டிற்கு அறிகுறியாகும். எரி யால் சுடப்படினும் உய்வு உண்டாம்; பெரி யாரைப் பிழைத்து ஒழுகுவாரும் உய்வரோ?

"வைகலும் நீருட் கிடப்பினுங் கல்லிற்கு
மெல்லென்றல் சால அரிதாகும்—அஃதேபோல்
வைகலும் நல்லறம் கேட்பினும் கீழ்கட்குக்
கல்லினும் வல்லெனு நெஞ்சு." (அறநெறிச்சாரம்)

“குன்றன்னார் குன்ற மதிப்பிற் குடியொடு
நின்றன்னார் மாய்வர் நிலத்து.” (குறள்)

“ஏந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும்.” (குறள்)

---

## 6. விதுரர் வில் முறித்தல்

பாண்டவதூதன் அச்சபையை விட்டு அகன்றதும் துரியோதனன் நிலை யாதா யிற்றென்பதை இனிக் கூறுவாம்.

ஐவர்க்குத் தூதாய் வந்த மாயவனுக்கு விருந்து அளித்தமைக்காக விதுரர்மீது கடுக்கோபங் கொண்டு துரியோதனன் ஆங்கிருந்தோரை நோக்கிச் சொல்வானாயினன் :—

“என்னே இவ் விதுரன் செய்கை! இவன் என் சோற்றை உண்டு என் பகைவர்க்கே அன்பு பாராட்டுகிறான்; என் வீட்டில் உணவு கொள்ளுதலை ஒழித்த அக் கள்வனுக்கு, இவன் தன் வீட்டில் நல்விருந்தளித்தான். இன்றளவும் என் கை யுணவை அருந்தியும் என்னிடத்தில் இவனுக்குச் சிறிதும் அன்பில்லை. என் பகைவருடைய தூதனுக்கு இவன், தன் சோறுபோல் இன்னடிசில் சமைத்து இட்டு, அவனுக்கு இனிமை செய்து வாழ்கின்றான். வேசி மகனாதலால் இவன் இங்ஙனம் செய்தான் போலும்! குலத்தளவே ஆகும் குணம்!”

விதியின் செயலால் துரியோதனன் புன்மதி பெற்று இங்ஙனம் பழிப்புரையும் அடா மொழியும் கூற, விதுரர் அச்சபை நடுவில் வருத்தத்துடன் எழுந்து நின்று, அக் கொடியோனை உற்று நோக்கி, "ஏ! மூடா! என்னைப் பழித்த உனது நாவினை வாளால் கொய்து, குருதிபெருகும்படி உன் தலையையும் யான் துணிக்கவல்லேன். மூத்தான் மகனை இளையான் முனிந்து கொன்றான் என்று உலகத்தவர் என்னைப் பழிப்பராதலால் உன்னை இப்பொழுது விடுத்தேன். அன்றியும் பீமார்ச்சுனர்கள் செய்த சபதம் பூர்த்தி பெறவேண்டு மன்றோ? வசைமொழி கூறிய நாவுடன் நீ வாழ்வையோ? மகா பாதகனாகிய உன் பொருட்டு யான் இனிப் போர்செய்யேன். உன் சோற்றை உண்டமைபற்றி உனக்கு எதிராகப் பாண்டவர்களோடும் சேர்ந்து போர் செய்யேன்," எனக் கடுமையாகப் பேசித் தன் கையிலிருந்த தெய்வ வில்லை முறித்து, இரண்டு துண்டாக வெட்டி எறிந்து, அச் சபாமண்டபம் விட்டு நீங்கித் தன் மாளிகை நோக்கிப் போயினர்.

"கண்ணுதலான் றன்சிலைக்குங் காகுத்தன் றன்சிலைக்கும்
எண்ணுங்கா னேரா மெழிற்சிலையை—நண்ணி
வெறுத்தாங் குரைத்தான்முன் வெவ்வுரையே பேசி
இறுத்தான் விதுரன்கை வில்."

"இன்னாச்சொல் வந்து செவிசுடலும் வேர்த்தெழுந்து
மன்னாட் டவரெனக்கு மாறிலார்—என்னாத்தான்

போர்க்களத்து விற்பிடியே னென்றுங் கிறுத்திட்டான்
கார்க்குமுதந் தானிடித்தாற் போன்று." (பாரத வெண்பா)

விதுரர் தம் வில்லை முறித்து வெளி ஏகிய தைக் கண்டு, எல்லா அரசர்களும் நடுங்கினர். அப்போது ஆங்கிருந்த பீஷ்மர் வருத்தத்துடன் துரியோதனனை நோக்கி, "நீ மூர்க்கங்கொண்டு விதுரனைப் பழித்துப் பகைத்தாய். இனிப் பகைவர்களை வெல்லும் உபாயம் ஏது? வென்றி விதுரனே கை வில் இறுத்தான். இனி விசயனோடு எதிர் அம்பு கோப்பார் யார்?," என்றார்.

அதற்குத் துரியோதனன், "அருச்சுனனை எதிர்த்துப் போர் செய்வதற்கு விதுரன் ஒருவன் தான் உளனோ? கொடையிற் சிறந்த கர்ணன் நம் பக்கத்தில் இருக்கின்றான்; அனைவரையும் எதிர்க்க அவன் வில் ஒன்றே போதும். அன்றியும் நம் பக்கத்தில் துரோணர், கிருபர், அசுவத்தாமா முதலானோரும் நீவிரும் இருக்கிறீர்கள். உங்களைப் பார்க்கிலும் விதுரன் சூரனோ? எதிர் கொண்டு போய் இடையனை அழைத்து வந்து நல் விருந்து செய்தவன் என்னை வெறுத்தால் தான் என்ன? அவன் சிலையை முறித்தால்தான் என்ன?" என்று பேசினான்.

இவ்வகைத் துரியோதனன் கூறியதும், அவன் அருகிருந்த கர்ணன் தன் கையோடு கை தாக்கி, முடி துளக்கி, நகை அரும்பிச் சபையோரை நோக்கி, "அரசர்களே! யான் ஒருவன்

இருக்க, விசயனோடு நெடும்போர் செய்து மலை வாரைத் தேடுவது ஏன்?," என்றான்.

இவ்வகையில் கர்ணன் சொல்லிய கட்டாண் மையும் சாமர்த்தியமும் கேட்டுத் துரியோதனன் மகிழ்ந்திருந்தான். அப்பொழுது பீஷ்மர், "கர்ண! நீ விற் போரில் வல்லவனோ? அவுணர் சேனை யெல்லாம் கொன்றுவித்த அவ் விசய னோடு எதிர் நிற்பவன் நீ தானோ? உன் ஆண் மையை யான் அறிவேன்!," என்று கூறினார்.

பீஷ்மர் சொல்லிய வார்த்தை கர்ணன் மனத்தை அறுத்தது. அதனால் அவன் உடனே எழுந்து, "ஒருவர் சோறுண்டு வேறு ஒருவர்க் காகப் பேசித் திரிவாருமுண்டோ? உண்ட அகத் திற்கு இரண்டகம் நினைத்தலும் கூடுமோ?" என்றான். இங்ஙனம் அங்கர்கோன் கூறும் போது அரவுயர்த்தோன் உளம் பூரித்தான். பீஷ்மர் மனம் புழுங்கினார்.

"விரியுள நாகம் விடருள தேனும்
உருமின் கடுஞ்சினஞ் சேணின்று—முட்கும்
அருமையுடைய வரண் சேர்ந்து முய்யார்
பெருமை யுடையார் செறின்." (நாலடியார்)

---

## 7. குந்தி கர்ணன் பிறப்பு அறிதல்

விதுரர் வில்லை முறித்தெறிந்து, தம் மாளிகை நண்ணி, ஸ்ரீ வாசுதேவனை வணங்கி, அங்கு இனிது இருக்கையில், உற்ற செய்தி

யாவும் உணர்ந்து அவர், "விதுர? நீ சீற்றம் பொங்கிச் சிலையை முறித்தது என்?" என்று வினவினர். விதுரர், "சுவாமீ! துர்க்குணங் களுக்கு இருப்பிடமாகிய துரியோதனனுக்கு உதவியாகச் சென்று போரில் இறத்தல் பழியும் பாவமும் ஆகும். உறவினரென்றும் துணைவரென்றும் அவன் கருதுவதில்லை; விதியின் விளைவையும் நினைவதில்லை. அன்றியும் அவன் தேவரீரையும் பழித்தான். அவன் உரைத்த புன் சொல் என்னை இடர்ப்படுத்தினமையால், சிலையை முறித்து எறிந்தேன். சிலையின்றி நான் அவனுக்கு யாது உதவி செய்யக்கூடும்? அவன் இனி அழிவன்," என்று கூறினர்.

கண்ணபிரான் தம் திருவுள்ளம் உவந்து, "விதுர! கண்ணிலான் மைந்தன் கழறிய வெல்லாம் நீ கருதற்க. ஐவருக்கும் நூற்றுவர்க்கும் இனி போர் நேராமல் இராது. துரியோதனன் நாற்படைகூட்டி அமர்க்களம் நண்ணும்போது, நீ இந்நகரில் இராமல் எங்கேனும் வெளியே போய் இருப்பையேல், உன் மைந்தராகிய ஐவர் தரணியும் திருவும் பெறுவர். உன் கை வில்லோ முறிந்தது. அழியும் காலம் அணுக அவற்கு அறிவும் ஒழிந்தது." என்று கூறிக் குந்திதேவியைக் காண அவள் வதியும் இடம் சென்றனர்.

குந்திதேவி, கண்ணனைக் கண்டு மகிழ்ந்து, எதிர்கொண்டு அழைத்துச் சென்று, சேமம்

உசாவி, "கிருஷ்ண! உனக்கு மங்களம் உண்டாகக் கடவது. நீ இவ்வூர் வரக் காரணம் ஏதேனும் உண்டோ?" என்று வினவினள்.

அதற்குக் கிருஷ்ணன், "தாயே! என் சொல்வேன்! கேள்; யான் உன் மைந்தர் நலம் ஒன்றே கருதி, அவர்களுக்காக நாடுவேண்டத் துரியோதனன்பால் தூதாக வந்தேன்; தருமபுத்திரன் சொற்படி முதலில் பாதிநாடு தர வேண்டினேன்; துரியோதனனோ அது தர உடன்படவில்லை; பிறகு ஐந்தூர் வேண்டினேன்; அவையும் கொடுக்க மறுத்தான்; மயிர்முனையளவும் மண் கொடேன் என்றான்; மூர்க்கமும் செருக்குங்கொண்டு சிறு தாதையையும் பழித்தான்; அவன் கூறிய வசைமொழிகளைக்கேட்டு ஆற்றாது, விதுரனும் வெகுண்டு தன் வில்லை இறுத்து எறிந்தான். இனி என் செய்வது? இரு திறத்தார்க்கும் போர் நேரும்," என்றார்.

இவ் விருத்தாந்தம் கேட்டுக் குந்தி, "கிருஷ்ண! போர் நிகழுமேல், வெற்றி பெறுவார் எவரோ? மடிவார் எவரோ? விதியின் செயல் எவ்விதமோ! உன் உள்ளக் கருத்து எதுவோ? அதன்படி யன்றோ அனைத்தும் நிகழும்," என்று கூறி வருந்தினள்.

அப்பொழுது கிருஷ்ணன், "தாயே! பாண்டவர்கள் போரில் உயிர் தப்பி வாழ ஓர் உபாயம் சொல்வேன், கேள். நீ கன்னியா

யிருந்த காலத்தில் தூருவாச முனிவர் உனக்கு ஐந்து மந்திரங்களை உபதேசித்தனரன்றோ? அவற்றுள் ஒரு மந்திரத்தினுல் நீ சூரியனைத் தியானித்தாய் ; உடனே அவன் உன் எதிரில்




தோன்றி, ஒரு புத்திரனை உனக்கு அநுக்கிரகித்தான். அக்கணமே அங்குத்தோன்றிய புத்திரனை 'வடு' என்று அஞ்சிப் பேராற்றில் விடுத்தனை. அவ் விளங்குமரன் ஆற்றிடையே போய்க் கங்காநதியைச் சேரும்போது, திருத

ராஷ்டிரனது தேர்ப்பாகன் அப்பேழையுள்ளி ருக்கும் புத்திரனை எடுத்துத் தன் புத்திரனுகவே பாவித்து வளர்த்து வருகையில், சூரியன் அசரீ ரியாக, 'இப் புத்திரனுக்குக் கர்ணன் என்று நாமம் சூட்டுக' என்று விதித்தான். தேர்ப் பாகன் அவனுக்கு அங்ஙனமே பெயரிட்டு வளர்க்கையில், கர்ணன் பரசுராமரிடம் படைக் கலம் பயின்று வல்லவனுய் விளங்கினன். அவன் திறமையைக் கண்டு துரியோதனன் அவ னைத் தனக்குத் தோழனுக்கிக்கொண்டு, அங்க நாடு தந்து அபிஷேகம் செய்தான். கர்ணன் இப்பொழுது துரியோதனுக்கு அந்தரங்க நண் பனுய்ப் பாண்டவர்க்குப் பகைவனுய்ப் பழி பாவம் விளைக்கின்ருன். தாயே! நீ அவனை வேருகக் கருதாது, புத்திரன் எனத் தெளிந்து, அவனிடம் போய் எல்லா விஷயங்களையும் ஆதி யோடந்தமாகச் சொல்லி, தம்பிமாருடன் கூடித் தரணியை ஆள அழைப்பாயாக; வர உடன் படானுயின் உனக்கு ஒரு வரமேனும் தர வேண் டிக்கொள். அதனையும் சொல்வேன், கேள். அருச்சுனன் காண்டவ வனத்தை எரி மூட்டிய போது, அசுவசேனன் என்னும் கோநாகம் உடல் அறுப்புண்டு பிழைத்துப்போய்க் கர்ண னிடம் சென்று, அவனை அடுத்து, அருச்சுன னுக்குப் பகையாக வாழ்கின்றது. கர்ணன் அந் நாகத்தைத் தொடுகணையாகக் கொண்டுள்

ளான். அந்தக் கணையை இரண்டாம் முறை அருச்சுனன் மீது எய்யாமலிருக்க அவனை ஒரு வரம் வேண்டிக்கொள்," என்றார்.

கிருஷ்ணன் அங்ஙனம் கூறுகையில், குந்தி கண்ணருவி சோர, விம்மி விம்மி வெய்துயிர்த்து, "மாயவனே! நீ செய்த வஞ்சனையின் திறம் என்னே! கர்ணன் என்னுடைய புத்திரன் என்பதை முன்னமே எனக்கு உணர்த்தாது, இதுவரையிலும் மூடி வைத்தாய். இரு திறத்தார்க்கும் போர் மூட்டி விட்டு, இப்பொழுது இந்தச் செய்தியைக் கூறுகின்றாய். அவன் பால் யான் போய் அவனை வேண்டிக் கொண்டு நாகக் கணையை விலக்கினால், அவன் அழிவன்; எனக்கு அவனும் மகன் அன்றோ?" என்று சோகித்துத் தரைமீதுசாய்ந்து உயிர்சோர்ந்தனள்.

அங்ஙனம் கிடக்கும் குந்திதேவியைக் கிருஷ்ணன் தேற்றி, "தாயே! ஐவர்க்கும் உடல் வேறாயினும் உயிர் ஒன்றேயாகும். அவர்களுள் ஒருவன் இறந்தால் மற்றையோர் உடனே ஆவி துறப்பர். அருச்சுனனைக் கொல்லின் ஐவர் உயிரும் அகலும். இவர்கட்குப் பகையாகி வாழ்கின்ற கர்ணன் ஒருவனே மடிதல் மேலானதன்றோ? ஆதலால் நீ கன்னன்பால் போய்க் குறித்த வரம் பெற்று வருக," என்று உரைத்தருளி, குந்திதேவியின் உறைவிடம் விட்டு, விதுரன் கோயிற் புகுந்தார்.

அப்பொழுது கதிரவனும் மேற்கடலில் மூழ்கினன். வையம் இருள் சூழ்ந்தது. எங்கும் வெய்ய ஒளி போய் விளக்கொளி பரந்தது.

---

## 8. துரியோதனன் பொய்யாதனம் அளித்தல்

அந்நாள் நடு நசியில் யாவரும் அறியாமல் துரியோதனன், தன் சபாமண்டபத்தில் திருவோலக்கம் இருந்து, தந்தையும், தம்பிமாரும், கர்ணனும், சகுனியும் தன்னுடன் இருக்கச் சதியாலோசனை செய்வானுயினன்.

அங்ஙனம் செய்கையில், துரியோதனன் ஆண்டிருந்தோரை நோக்கி, "மதிவல்லீர்! காடு சென்ற பாண்டவர்களை அழைத்து வந்து, மீண்டும் நாடு வேண்டுமாறு கலகம் செய்து, போர் மூட்டுகின்ற அவ்விடையன் இப்பொழுது நம் நகரத்தில் வந்திருக்கிறுன். அவனை என்ன செய்யலாம்?" என்று யோசனை கேட்டான்.

முதன் முதலில் திருதராஷ்டிரன், "மைந்த! வலையில் அகப்பட்ட புலியை வேடர்கள் விடுவார்களோ? இவ் விரவிலேயே திரண்ட சேனையுடன் சென்று, அம் மாயவனை வளைந்து, பொழுது புலருமுன் அவனைக் கொல்வதே நாம் செய்யத்தக்க கருமமாகும்," என்ருன்.

நூற்றுவரில் நல்லோனுகிய விகர்ணன் அக் கடுமொழி கேட்கச் சகியானுய், " அண்ண! இவ்

வுலகில் இதற்குமுன் எவரேனும் தூது வந்தவரைச் சூழ்ந்து கொன்றதுண்டோ? எங்குக் கற்ற யோசனே இது? இது எங்ஙனம் அடுக்கும்? நம்மூரில் வந்தவர் பகைவரே ஆயினும் அவரைக் கொல்லுதல் பாவமாகும். அது ஆண்மையும் அன்று. அன்றியும் நீங்கள் எவ்வகை உபாயம் செய்தபோதிலும், கொண்டல் வண்ணன் உங்கள் கைக்கு அகப்படான்,'' என்று கூறினுன். 'நூற்றில் ஒருவனுவது நல்லவனுக இருப்பான்,' எனும் பழமொழி தோன்றியதற்குக் காரணம் இவ் விகர்ணனே ஆவன்.

விகர்ணன் இங்ஙனம் சொல்லியதைக்கேட்டவளவில், துச்சாதனன், தம்பியைச் சீறிக்கோபித்துப் பின் தமையனே நோக்கி, "அண்ண! மந்திராலோசனே செய்யும் இடத்திற்கு இளேஞரை வரவழைத்தது சிறிதும் தகுதியன்று. நாம், அரசர் பலர் புடைசூழச் சென்று, விதுரனது மாளிகையில் எல்லாப் பக்கத்தும் எரி மூட்டி அதனே எரித்து, விதுரனும் அங்குள்ள அவ்விடையனும் வெந்து சாகுமாறு செய்வதன்றி, வேறு ஆலோசனே என்ன இருக்கின்றது? இப்பொழுதே விரைந்து புறப்படுங்கள்,'' என்முன்.

தன் புன்மதிக்கு ஏற்றபடி துச்சாதனன் இங்ஙனம் ஆலோசனே சொல்லி முடித்ததும், கர்ணன் கனன்று எழுந்து, "துரியோதன! இல்லில் எரி யிடவும் வேண்டுமோ? வெங்கணே ஒன்

றினால் நான் அவ்விடையனைக்கொன்று வெற்றியுடன் மீள்வேன். சூரியன் சீறி எழுந்தால் இருள் எதிர் நிற்குமோ? ஏன் வீண் ஆலோசனை? இவ்விரவிலேயே புறப்படுங்கள்,'' என்று வீராவேசத்துடன் பேசினான்.

கர்ணன் பேசி முடிந்ததும் சகுனி, "கேளீர் என் மொழியை; நமது அத்திநபுரத்தில் வந்துள்ள பாண்டவதூதன் இவ் வூரைவிட்டுப் பெயர்ந்து நாளை பகைவரைக் கூடுவானாயின், நம்மைப்போரில் வெல்ல ஒட்டான். ஆதலால் அக் கள்ள மாயனை இப்பொழுதே வஞ்சகச் சூழ்ச்சியால் விரைவில் வெல்லவேண்டும். தூதரைக் கொல்வது அரசர்க்குத் தகுதியல்ல வாதலால், அவனை வஞ்சகத்தால் வென்று கடுஞ் சிறைப்படுத்த முயலவேண்டும். நம் அரண்மனையில் நிலவறை ஒன்று பறித்து, அதனுள் மல்லரையும் அரக்கரையும் நிறுத்தி, மேலே பொய்யாசனம் ஒன்று வஞ்சனையாக இட்டு, நாளைப் பகலில் அம் மாயவனை வரவழைத்து, படுகுழியில் வீழ்த்தி, வீழ்ந்த உடனே அவனுக்குத் தளையிட்டுச் சிறையில் வைத்தலே தக்க சூழ்ச்சியாகும். தூதர்க்கு உற்ற தண்டனையும் இதுவே. அதன் பின் இராச்சியம் நமதாகும்; இதற்குச் சிறிதும் சந்தேகமில்லை,'' என்றுரைத்தான்.

துரியோதனன் சகுனியைப் பலவாறு புகழ்ந்து, அவன் திறமையை உன்னி மகிழ்ந்து,

பின்பு குறித்த கருமம் முடிக்கக் கருதினான். அவன் அந் நடு நிசியில் தூக்கம் இன்றி ஊக்கம் கொண்டு, யாவரும் அறியாமல் சபாமண்டபத்தில் நிலவறை ஒன்று பறிப்பித்தான்; மதித்த அரக்கர்களையும் மல்லர்களையும் அதனுள் நிறுத்தினான்; அதன் பிறகு அந் நிலவறையின் மீது மெல்லிய மூங்கிற் கழிகளைப் பரப்பி அதனை மூடினான்; பின்பு அதன்மீது களி மண் தீற்றி, எழில் வாய்ந்த கம்பளம் விரித்து, நவமணி யாதனம் சமைத்து, விசித்திர விதானம் ஏற்றினான்; அன்றியும் அங்கு யாதொரு வேறுபாடும் தோன்றாதபடி சபாமண்டபம் முழுமையும் அழகுற அலங்கரித்தான். இதற்குள் கங்குலும் கழிந்தது. கதிரவனும் கீழ்த்திசையில் தோன்றினன்.

துரியோதனன் அந்நாட்காலை சஞ்சயனை விளித்து, கண்ணனை அழைத்து வரத் தூது போக்கினான். விதுரரது மாளிகையிலிருந்த கண்ணபிரான் அதிகாலையில் அருந் துயிலினின்றும் எழுந்து, விதிப்படி நித்தியகருமம் முடித்துப் பின் பாண்டவரிடம் போவதாகத் துணிந்து, அணி நெடுந் தேரேறிப் பிரயாணமாயினர். அச் சமயத்தில் சஞ்சயன் அங்கு வந்து கண்ணன் எதிரே சென்று திருவடி தொழுது, "சுவாமீ! அடியேன் துரியோதனனது தூதன். பேசுங் காரியம் ஒன்று உண்டென்று எம் அரசன் தேவரீரை அழைத்துவரப்

பணித்தான்,'' என்று நவின்று அரண்மனைக்கு எழுந்தருளும்படி வேண்டினன்.

கண்ணபிரான், துரியோதனனது கருத்தைக் குறிப்பாக அறிந்து மகிழ்ந்து துரிதமாகப் புறப்பட்டு அவனுடைய அரண்மனை குறுகினர். அப்பொழுது துரியோதனன், தனது சபாமண்டபத்தில் மன்னர் பலர் புடை சூழ்ந்து சேவை பண்ண, கவரி கால் அசைக்க, வெற்றியுடன் சகுனியும் துச்சாதனன் முதலிய தம்பியரும் கர்ணனும் அருகிலிருக்கச் செருக்குடன் அரியாசனத்தின் மீது அமர்ந்திருந்தான்.

> "பாம்புயர்த்த வெல்கொடியோன் பக்கம் பலநூறு
> காம்புயர்த்த வெண்கவரி காலசைப்பப்—பூம்புயத்துத்
> தெட்டரசர் கூட்டந் திறைகொணர வீற்றிருந்தான்
> கட்டரசர் கூட்டங் கலந்து." (பாரத வெண்பா)

இங்ஙனம் இருக்கையில், 'கண்ணபிரான் பல்லரசரோடும் நால்வகைச் சேனையோடும் வருகிறார்,' என்னும் செய்தி துரியோதனன் செவிக்கு எட்டிற்று. உடனே அவன், தன் வாயிற் காவலரை விளித்து, "கண்ணன் ஒருவனை மட்டும் உள்ளே விடுங்கள்,'' என்று கட்டளையிடக் காவலரும் அங்ஙனமே செய்தனர்.

கண்ணபிரான், இராசராசன் கட்டளைகேட்டு, இன்புற நகைத்து, தம் பெருஞ் சேனையை வெளியே இருக்கச்செய்து, உள்ளே சென்று வேந்தர் இருந்த பேரவையின்கண் எய்தினர்.

அப்பொழுது துரியோதனன் வஞ்சகமாக அவரை அன்புடன் வரவேற்றுப் படுகுழிமீது இட்டிருந்த பொய்யாதனத்தைச் சுட்டிக்காட்டி, அதன்மீது வீற்றிருக்க வேண்டினன். ஸ்ரீவாசுதேவன் அவ்வாதனத்தில் அமர்ந்த அளவில் அவ்வாசனம் கீழ்தாழ்ந்து நெறு நெறு என நிலம் நெளியப் புகுதலும், பெருமான் புன்முறுவல் செய்து, விசுவரூபம் கொணடனர்.

"வஞ்சனை யென்று மணியா சனந்தன்னை
அஞ்சன வண்ண னறிந்தருளிச்—செஞ்சுடரைப்
பூண்டான் பொறிபிதிரப் பொன்முடிபோ யண்டமுற
நீண்டான் விழித்தான் நெருப்பு." (பாரத வெண்பா)

இங்ஙனம் விசுவரூபங்கொண்டு விளங்கின திருமால், நிலவறையிலிருந்த அரக்கர்களையும் வீரரையும் உதைத்துத் துகைத்துக் கொன்றனர். முன்னம் ஒருகால் வாமனனாய் மண்வேண்டித் திரிவிக்கிரம் உருவம் கொண்ட பிரான், இப்பொழுது பாண்டவ தூதனாய் மண் வேண்டி விசுவரூபத்துடன் ஓங்கி எழுந்தனர்.

ஸ்ரீ வாசுதேவன் இங்ஙனம் பேருருவம் கொண்டருளுங்கால் மூன்று உலகங்களும் நடுங்கின; பஞ்ச பூதங்களும் நிலை குலைந்தன. யுகமுடிவோஎன அஞ்சினர் அனைவரும். அதன் பின்,

மதனப் புத்தேள் பொடிபட விழித்த
நுதற்பெரு நயனத் தொருபெருங் கடவுளும்
நான்முகத் தொருவனும் வானகத் தரசனும்

அறுமுகத் தொருவனு முறுசுடர்ப் பரிதியும்
குளிர்மதிச் செல்வனு மிருநிதிக் குபேரனும்
வானுறை தேவருங் காயெரிக் கடவுளும்
இயமனும் வருணனு மெண்வகை வசுக்களும்
வீரப் பெண்மையின் மெல்லிய ரெழுவரும்
போர்விறற் சிலைக்கைப் பொருகயற் கண்ணியும்
மோடியு மக்களு மூவகை முனிவரும்
வானோ ரீட்டமு மன்னிய கின்னரர்
ஏனோர் விஞ்சையர் தம்முட னஞ்சலி
அவுணரு மரக்கரு மதிர்ந்த வுயர்நிலை
அண்ட கோளகை நிறையவந் தீண்டி
மாதவா! முனியேல்!! மாயா! முனியேல்!!
மூவகை யுலகின் முதல்வா! முனியேல்!!
இமையவர் மகிழ வீரடி தம்மான்
மூன்றுலகுஞ் சுருக்கிய முதல்வா! முனியேல்!!
மூவா மருந்து வானோர்க்கருளிய
தேவா! முனியேல்!! திருமால்!! முனியேல்!!
(பெருந்தேவனார்)

என்று எத்திசையும் துதித்து வணங்கினார்கள். அங்குச் சபையிலிருந்த அரசர்களும், பீஷ்மர், விதுரர், துரோணர் முதலானோ ரனைவரும் ஒருங்கு எழுந்து சிரத்திற் குவித்த கரத்தினராய், ஒத்த மனத்துடன் பலவாறு போற்றி, "எங்கள் பிழையை இன்று பொறுத்தருள்க," என்று பணிந்தனர். எம்பெருமான் அவர்கள் பிரார்த் தனைக்கு இசைந்து, தம் திருமேனியைச் சுருக்கி முன்போலாயினர். இத்தகைய தோற்றம் கண்டும் துரியோதனன் சிறிதும் மனம் அஞ்சி அயர்ந்

திலன் ; ஆசனம் விட்டுப் பெயர்ந்திலன் ; கை குவிந்திலன் ; அவர் நாமம் உரைத்திலன் ; இம் மாத்திரமேயன்றி அப் பாதகன் கிருஷ்ணனை நோக்கி, “ அடே யாதவ ! நான் அரசனுயின பின் அநேக ஜால வித்தைகள் பார்த்திருக்கி றேன் ; நீ இம் மாயம் எங்குக் கற்றாய் ? இது எம் மாத்திரம் ! நீ இன்னம் அதிகம் கற்று வருவையேல், உனக்குத் தக்க சம்மானம் செய் வேன்,” என்று கூறினன்.

அதற்கு ஸ்ரீ வாசுதேவன், “பதரே ! நான் இப்பொழுதே உன்னையும் உன்னைச் சேர்ந்தவர் களையும் புழுக்களைப்போலத் தேய்த்து ஒரு நொடி யில் கொல்வேன். ஐவர்கள் கொண்ட சபதம் பூர்த்திபெற வேண்டுமென்றோ ? ஆதலால் இவ் விடத்து நிகழ்ந்தன வெல்லாம் பொறுத்தேன். இனி இவ்விடத்தில் நான் இருத்தலும் தகுதி யன்று,” என்று வெறுத்துக் கூறிச் சபாமண்ட பம் விட்டு வெளியேகினர்.

---

## 9. கண்ணனும் கர்ணனும்

கண்ணபிரான் துரியோதனனுடைய சபையை விட்டு வெளியே செல்லும்போது எல்லா அரசர்களும் அவரைப் பின் தொடர்ந்து வழி விடலாயினர். அவர் சிறிய போது நின்று, அவர்களுக்கு உபசார மொழிகள் சில கூறி,

அவர்களை நிறுத்தி விடை கொடுத்து அனுப்பி விட்டுப் பின்பு கர்ணனைக் கை பிடித்துச் சிறிது தூரம் அழைத்துச் சென்று, அவனுக்கு ஓர் இரகசியம் உரைக்கலாயினர் :—

"கர்ண ! பாண்டவர்க்குரிய தாய பாகத்தை யான் கேட்கத் துரியோதனன் தந்திலன். இதை நீ அறித்திரு. யான் உனக்கு ஓர் இரகசியம் சொல்லுகிறேன் ; பாண்டவர் ஐவரும் உனக்குத் தம்பியர்கள் ஆகின்றார்கள். குந்தி தேவியோ ஆறு புத்திரர்களைப் பெற்றாள். நீ அனைவர்க்கும் மூத்தோன் ஆகின்றனை. அவ் விருத்தாந்தம் சொல்வேன் கேள். குந்தி கன்னியா யிருக்குங் காலத்து, தூர்வாசமுனிவர் குந்திபோஜராஜன் அரண்மனைக்கு எழுந்தருளினர். தந்தையின் நியமனப்படி அவள் அம்முனிவரைச் சில நாள் பூசித்துவர, அவர் பிரியமெய்தி அவளை நோக்கி, "பெண்ணே ! நீ பாண்டு மகாராஜனுக்குத் தேவியாக விதி யுண்டு. யான் உனக்கு ஐந்து மந்திரங்களை உபதேசிக்கின்றேன். இம் மந்திரங்களை உச்சரித்து நீ தேவர்களில் யார் யாரைக் கருதி அழைக்கின்றனையோ அவரவர் உடனே தோன்றி உனக்கு அருள்புரிவர்," என்று கூறி மந்திரம் உபதேசித்துச் சென்றனர்.

"பின்பு குந்தி, அம்மந்திரத்தின் சக்தியைப் பரீக்ஷிக்க விரும்பித் தனியே ஓரிடத்து இருந்து, அவற்றுள் ஒன்றால் சூரியனை வேண்டினள். சூரி

யன் அக்கணமே அவள் முன்பு பிரசன்னமாகித் தன்னை யொப்பதொரு பிரகாசம் கொண்ட புத்திரனை அவளுக்குத் தந்து ஏகினன். அங்ஙனம் தோன்றிய புத்திரன் ஆபவன் நீயே.

"இன்னம் கேள்; கன்னியா யிருக்கும்போது மகவு ஈன்றமை தனக்கு வடு ஆகுமென அஞ்சி, அவள் முகம் வாடி, அப் புத்திரனை ஒரு மிதவைப் பேழையில் இட்டுப் பேராற்றிடையே போக்கினுள். அது அலைகளால் மோதுண்டு கங்காசலத்திற் புக, அதனைத் திருதராஷ்டிரனது தேர்ப்பாகன் கண்டு எடுத்துக் குழவி எனத் தெளிந்து மகிழ்ந்து தனக்குப் புத்திரனுக வளர்த்து வந்தான்.

"பின்பு அவன் அப்புத்திரனுக்கு நாமகரணம் செய்யும்போது சூரியன் ஆகாயத்தில் அசரீரியாகத் தோன்றி, 'கர்ணன்' என்று பெயரிட விதித்தான். தேர்ப்பாகன் அங்ஙனமே அப் பெயர் சூட்டி வளர்த்துவர, அவன் குமாரனுகிய நீ பரசுராமனிடம் வில் வித்தை பயின்று தேர்ந்து விளங்கினுய். துரியோதனன் உன் திறமை கண்டு வியந்து உன்னுடன் தோழமை கொண்டு, உன்னை அங்கவள நாட்டிற்கு அதிபதி யாக்கினன். நீ இதுகாறும் உன் பிறப்பை அறிந்திலை. குந்தியும் உன்னை இன்னுனென்று அறியாது, தன்னிடம் தோன்றிய புத்திரன் கதி யாதாயிற்றே என்று வெகு நாளாய்ப் புத்திர

சோகம் கொண்டிருக்கின்றனள். ஆதலால் இனி நீ உன் தம்பியர்களோடு கூடி இனிது வாழ்வாயாக," என்று கண்ணபிரான் கூறினர்.

கர்ணன் இவை யாவும் கேட்டு அதிசயித்து, "கிருஷ்ண! யான் இன்றே பிறப்பு உணர்ந்தேன்; இனி என் செய்வது! அன்பால் மனம் கரைந்து தம்பியர்பால் யான் இப்பொழுது சென்ருல், உலகம் என்னைப் பழிக்குமன்ரு? அன்றியும் இது பிழையாகுமே! இன்னுனென்று அறியத் தகாத என்னை ஓர் அரசனுக்கி, முடி சூட்டி, எனக்குச் சீரும் பெருந்திருவும் தந்த துரியோதனனை வெறுத்துப் பிரிதல் நலமாகுமோ? நூற்றுவர்க்கும் ஐவர்க்கும் கடும்போர் விளையுமென்று அறிந்திருந்தும், இங்ஙனம் நான் செய்தல் அடுக்குமோ? செய்ந் நன்றி குன்றுவோர் கொடு நரகிற் புகுவரன்ருே? ஆதலால் செருக்களத்தில் என் தோழனுக்காகவே என் உயிரைப் போக்குவேன்," என்றுரைத்துத் தன் கோயில் போயினுன். கண்ணபிரான் அசுவத்தாமனேடு பேசுவாராயினர்.

---

## 10. கண்ணனும் அசுவத்தாமனும்

கண்ணபிரான் அசுவத்தாமனை ஒரு தனியிடம் கொண்டிருந்து, "போர் ஏறே! உனக்குப் பாண்டவர்கள்பால் உண்மையான அன்பு உண்

டல்லவா? அவர்கள், கானம் பல திரிந்து, விரத மொழி தவருமல் இந் நாள்வரை இருந்து மீண்டு வந்து, ஐந்து ஊர் வேண்டியும் துரியோதனன் மறுத்தான். இந்த நியாயம் யார்க்கு அடுக்கும்? நாளைச் செருக்களத்தில் நீயே எதற்கும் சாக்ஷி ஆவை. உனது ஆண்மைக்கு நிகராவார் இந் நில வுலகத்தில் யாவர்? துரியோதனன் தானுக உன்னை வலிய அழைத்துச் சேனுதிபதி ஆக்கினுல், நீ அவ் வதிகாரத்தை ஏற்றுக்கொள். நீயே அதனை ஏற்றுக்கொள்ளற்க. விரும்புவையேல் அது உன் ஆண்மைக்கும் பெருமைக்கும் குறைவாகும். நீ சேனுதிபதி ஆகாம விருப்பையேல், ஐவரும் உய்வர். குரு வசனமே துணையாக வாழும் பாண்டவர்களின் கதியை நீ அறிந்திரு," என்று கூறி அவன் மனத்தைக் கலைத்துத் தம் கையிலிருந்த விரலாழியை மெல்லக் கழற்றி ஒருவரும் அறியாது அசுவத்தாமன் முன்னே வீழ்த்தி, "ஆழிதனை எடுத்துத் தா," என்ருர்.

மாயோன் விரலாழி மண்மீது விழக் கண்ட அசுவத்தாமாவும், மாயை என்று உணராது, அதனை எடுத்து அப் பெருமான் கைதனில் கொடுக்குமளவில், அவர் அவன் கரத்தைப் பிடித்துச் சூரியனை நோக்கி, "பாராய்! அசுவத்தாமா! சூரியனைப் பரிவேஷம் சூழ்ந்துளது. உலகத்திற்கு ஏதேனும் விபரீதம் தோன்

றுமோ?" என்று கூறிக்கொண்டே தன் மணி யாழியை வாங்கித் தன் விரலில் புனைந்தார். அசுவத்தாமனும் சூரியனைப் பார்த்து வியந்தான்.

கிருஷ்ணன் இங்ஙனம் இயற்கைபோல் செய்வித்த மாயம், பார்ப்பவர்க்கு விரோதமாகத் தோன்றிற்று. 'அசுவத்தாமன் அந்தரங்கமாய் இரகசியம் பல பகர்ந்து, கண்ணன் கைம் மோதிரத்தைத் தன் கையில் வாங்கி, மண்ணைத் தொட்டுப் பின் விண்ணை நோக்கிச் சூரியனைச் சாக்ஷி வைத்து, ஏதோ சத்தியம் செய்து கொடுத்தான்," என்று ஆங்கிருந்தோர் எடுத்துரைக்கலாயினர்.

இவர்கள் இங்ஙனம் பேசுகையில் கண்ண பிரான் தன் எண்ணம் பலித்ததென்று மகிழ்ந்து, அசுவத்தாமனுக்கும் மற்றுமுள்ள அரசர்க்கும் விடைதந்து விதுரர் மாளிகை சேர்ந்தனர்.

துரியோதனன் அசுவத்தாமாவை முனிந்து, பீஷ்மர், துரோணர், கிருபர், கர்ணன் உள்ளிட்ட அரசர்களை நோக்கி, "தேர்வேந்தீர்! என்னே இவ்வசுவத்தாமன் செய்கை! மாற்றவருடன் இவன் வஞ்சனைத் தொழில் புரிகின்றான். தனியே வந்து அகலும் தூதனைத் தானே போய் அணுகி, மோதிரம் தொட்டுச் சூளுற்றான். இவனை நான் எப்படி நம்புவது? இனி நமக்குக் கர்ணன் ஒருவனே துணை," என்று வெகுண்டு உரைத்தான். துரியோதனன் சொல்லிய வார்த்தையும், அவன் அருகில் இருந்த பிற

அரசர்கள் ஒருவர்க்கொருவர் உரைத்தவையும், அசுவத்தாமன் செவியில் வீழ்ந்தன.

அதன்பின் அவன் துரியோதனனைக் குறுகி "ஒருவர் சோறுண்டு மற்றொருவர்க்காக நிற்பவர் அருநரகில் வீழ்வர்; மண்ணில் வீழ்ந்த மணியாழியைக் கிருஷ்ணன் எடுத்துத் தா என்றான்; யாதொரு வஞ்சகமும் யான் அறியேன். யான் அதனை எடுத்துக் கொடுக்கும் போது அவன் சூரிய பரிவேஷத்தை எனக்குக் காட்டினன்; பின்பு மணியாழியை வாங்கிக் கொண்டு எனக்கு விடை தந்தனன். இதனை யாவரும் அறிவர்," என்று பேசிச் சினந்தான்.

அப்பொழுது துரியோதனன், அவனை நோக்கிக் கை கவித்துக் கோபம் போக்கி, அவனுக்கும் மற்றைய அரசர்கட்கும் விடை கொடுத்துத் தானும் தன் கோயில் புகுந்தான். அதன் பின் கர்ணன் தன் கோயில் புகுந்து, ஒரு தனி மண்டபத்திருந்து, ஸ்ரீ வாசுதேவன் விதுரரது வீட்டில் உண்டமையும், விதுரரை வில் முறிப்பித்தமையும், பின்பு அசுவத்தாமாவைச் சேனாதிபத்தியம் விலக்கினமையும், தன்னுடன் பேசிய பூர்வங்களும் உணர்ந்து, அம் மாயோன் புரிந்த வஞ்சனையால் நூற்றுவரும் தானும் போர்க்களத்தில் படுவது திண்ணமென நினைந்து, விதியின் வலியே வலி எனக் கருதியவனாய், சர்வ தானம் பண்ணத்தொடங்கினான்.

[தொன்

"கற்ரூேர்க்கு நான்மறைநூல் வல்லோர்க்குங் கையலங்
றற்ரூேர்க்கு மில்லா திரப்போர்க்கும்—பொற்ருள்
நிறைகூவித் தான் கொடுப்ப நீள்கதிரோன் மைந்தன்
அறைகூவித் தானளித்தா ணுங்கு."

"ஆறுநூ ருயிரம்பேர்க் காறுநூ ருயிரம் பொன்
வேறுவே ருக விரைந் தீந்து—மாறிலா
மாநிதியம வேண்டி வருவார்க்கு மற்ரூேர்க்குந்
தானிதிய மீகின்ருன் தான்." (பாரத வெண்பா)

எழின்முடி மன்னர் பலர் தரும் திறைப் பொருள் முற்றும் முற்பகலில் மாதானம் பண்ணிப் பிற்பகலில் கர்ணன் போய்த் தன் நேரிழையாளுடன் அந்தப்புரத்து இனிது இருந்தனன்.

---

## 11. இந்திரனும் கர்ணனும்

விதுரரது மாளிகைக்கு எழுந்தருளிய கண்ணபிரான் மீண்டும் பிற சூழ்ச்சிகளைச் செய்து முடிக்க உன்னிக் கர்ணனுடைய வலிமையை ஒழிக்க ஓர் உபாயம் மேற்கொண்டு, அங்கு ஏகாந்தமாக ஓர் இடத்திருந்து தேவேந்திரனை நினைந்தருளினன். அக்கணமே வாசவன் அவரெதிரில் வந்து, அடிபணிந்து கைகூப்பி நின்ருன். கண்ணபிரான், கண்ணும் கருத்தும் களிகூர்ந்து, கண்ணுயிர முடையோனை ஓர் ஆசனத்தில் இருக்கச் செய்து, "வச்சிராயுதனே! யான் சொல்வதைக் கேட்பாயாக; உன் மகன் அருச்

சுனனைச் கொல்ல நாகாஸ்திரம் ஒன்று கர்ண னிடம் காத்திருக்கின்றது. அந்த அரவக்கணை கொண்டு, கர்ணன் விசயனைக் கொல்வன்; விசயன் வீழ்வனேல், நிலவுலகம் முழுமையும் கண்ணிலான் மைந்தனுக்கே உரியது ஆகும்.

"பிறக்கும்போது உடன் தோன்றிய கவச குண்டலங்களுடன் கர்ணன் விளங்குவனேல், அவனைப் போரில் மலைந்து கொல்ல இம் மண் டலத்தவரில் எவராலும் ஆகாது. மைந்தன் நன்மையை நீ விரும்புவையேல், இப்பொழுதே ஓர் எளிய பிராமண உருவம்பூண்டு, கர்ணனைக் கண்டு, தக்கவரம் வேண்டி, உன் திறமையால் அவனை மயக்குவித்து, எவ்விதத்தி லாகிலும் அவனது கவச குண்டலங்களைத் தானமாகக் கேட்டு வாங்கிக்கொண்டு வருவாயாக; இந்தப் புவியில் அவன் ஒன்றும் மறுத்து அறியான்; உயிரே எனினும் ஈந்திடுவான்.

"வல்லார்வல்ல கலைஞருக்கு மறைநூலவர்க்குங் கடவுளர்க்கு
மில்லாதவர்க்கு முள்ளவர்க்கு மிரந்தோர் தமக்குந் துறந்தவர்க்குஞ்
சொல்லாதவர்க்கும் சொல்பவருக்குஞ் சூழுஞ்சமயாதிபர்களுக்கு
மல்லாதவர்க்கு மிரவிமக னரியதானம ளிக்கின்ருன்."

(வில்லி பாரதம்)

"ஆதலால் நீ கவச குண்டலம் பெற்று வருவையேல், வெம் சமரில் விசயன் வெல்வன். கர்ணனும் முடிசிதறி மடிவன்," என்று உபாயங் கூறினர். இந்திரன் அவ்வாறே செய்ய உடன் பட்டுக் கர்ணனிடம் செல்வானுயினன்.

இந்திரன், மூப்பு முதிர்ந்த ஓர் அந்தண உருவம் கொண்டு, நரைதிரையுடன் வில்லென வளைந்த மேனியனுய், தாளிணைகள் தளர்ந்து தள்ளாடத் தள்ளாடக் கோலொன்று ஊன்றி, குடையொன்று கைப் பிடித்து, யாவரும் கண்டு கைதொழ மெல்ல நடந்து சென்று, கர்ண னுடைய அரண்மனை வாயிலை அடைந்தான். ஆங்கிருந்த காவலர் அவ் விருத்த வேதியனைக் கண்டு, " அந்தணர் பெரும! எங்கள் தலைவர் முற்பகலளவும் இரவலர்க்குத் தானமும் பரிசும் கொடுத்து உள்ளே சென்ருர். இன்று நேர மாயிற்று ; நாளை வாரும்," என்ருர்கள்.

மறையோன் அம்மொழி கேட்டு ஏங்கி, "நற் காவலரே ! நான் வெகு தூரத்திலிருந்து வரு கின்றேன் ; வயதோ மேலிட்டது ; உடலோ தளர்ந்தது ; மிக்க வருத்தத்துடன் மெல்ல வழி நடந்து வந்தேன் ; ஆதலால் இந்நேரம் சென் றது ; நீங்கள் என் வரவை உங்கள் தலைவற்கு அறிவியுங்கள்," என்று வேண்டினன்.

காவலர், இரக்கங் கொண்டு, அரண்மனைக் குட் சென்று, தங்கள் தலைவனைக்கண்டு தொழுது, பிராமணன் ஒருவன் கடை வாயிலில் காத்திருப் பதை அறிவித்தனர். கர்ணன் கதுமெனச் சிங்காதனம் விட்டெழுந்து " அவரை இங்கு வரவிடுமின்," என்று கூறியதும் காவலர் மாய மறையவனை உள்ளே அழைத்து வந்தனர்.

கர்ணன், விருத்த வேதியனைக் கண்டு எதிர் சென்று வணங்கிக் கைந்நீரும் அடிநீரும் உண்ணீரும் தந்து, ஆசனம் இட்டு, இன்சொல்லுடன் உபசரித்து, "சுவாமீ! தேவரீர் இங்கு வர, யான் என்ன மாதவம் புரிந்தேனோ! என் இல்லம் புனித மாயிற்று. தேவரீர் என்னிடம் வேண்டி வந்த பொருள் என்ன?" என்றான்.

பிராமணன்:—"வேந்தே! நீ கொடையிற் சிறந்தவனென்று உன்னிடம் வந்தேன். நான் இருப்பது வெகு தொலை; விருத்தனாகையாலும், நடக்கமாட்டாமையாலும், முன் பொழுதில் வரக்கூடவில்லை. அபராந்நமாயிற்று; இப்போது யான் வேண்டும் வரம் தரவல்லையோ?"

கர்ணன்:—"அந்தணர் பெரும! நீர் எது வேண்டினும் தருவேன்; உயிரேனும் ஈவேன்."

பிராமணன்:—"யான் வேண்டும் பொருள் உன்னால் தரக்கூடியதே; தருவது உண்மையாயின், என் மனக் கருத்தைச் சொல்வேன்."

கர்ணன்:—"சுவாமீ! அழகியதே சொன்னீர்! யான் முன்னம் சொல்லியதைப் பின்னம் மறுப்பனோ? மறுப்பின் போரில் தன் நாயகன் படத் தன் சாவுக்கு அஞ்சிஓடுபவனும், மன்றில் வலிந்தோனும், பெற்றோரை இகழும் பேதையும் ஆகிய இவர்கள் புகும் நரக மெய்துவன்."

பிராமணன்:—"மன்ன! யான் விரும்பிக் கேட்பதை நீ தருவையேல் உன் பெருமையைப்

பிறர்க்கு உரைப்பேன் ; நின் காதிலுள்ள கவச குண்டலங்களைத் தருவாயாக.''

கர்ணன்:—“ என்னுடன் பிறந்த கவச குண்டலங்கள் எவர்க்கும் வாங்க ஒண்ணுவாகும். ஆதலால் பொன்னின் ஆரமும் மணிமுடியும் நவரத்தினமும் கொண்டு போவீராக.''

பிராமணன் :—“ கொடையிற் சிறந்த கோவே! யான் அணிகலனும் வேண்டேன் ; இருநிதியும் வேண்டேன்; பொன்முடியும் வேண்டேன்; ஆ நிரையும் வேண்டேன்; கோக்களிறும் வேண்டேன் ; உன் காதின் குண்டலத்தை ஈவாயாக. உன்னால் தர எளிதாய் உன்னிடத்திலுள்ளதை நீ மறுத்தால் நீ வள்ளலோ?''

கர்ணன் :—“ என் வாழ்நாளை வேண்டினும் யான் மறுப்பனோ! நீர் வேண்டியதைக் கொள்வீராக; மறுத்திட்டேனென்று மயங்க வேண்டாம்; அவற்றை அறுத்துக்கொள்க.''

விருத்த வேதியன், கர்ணனுடைய மகிமையைக்கண்டு வியந்து, அவன் காதருகே தன் கை நீட்டுகையில், “ கர்ண ! அருச்சுனன் போர்த் தொழிலில் வெல்லும் பொருட்டு மாயவன் ஏவிய பணியால் இவன் ஏற்கின்றான். அருச்சுனனது தந்தையாகிய இந்திரன் இங்ஙனம் வேதியனாய் வந்துள்ளான். கவசகுண்டலங்களைத் தராது இருப்பாயாக. யான் உனது தந்தையே,'' என்று சூரியன் அசரீரியாகக் கூறினன்.

கர்ணன் உடனே ஆதித்தனை நோக்கி, "என்பிதாவே! நிலையற்ற உயிரைக் கொடுத்தாகிலும் புகழைப் படைத்தல் நல்லவர்க்குக் கடனாகுமென்பர் பெரியோர். அன்னோரின் நீதி வாக்கியத்திற்கு இலக்கியமாய், யான் முந்து நிற்க விரும்புகின்றேன். ஆதலால் என் கவசகுண்டலங்களைக் கொடுக்க அருளிச்செய்வாயாக," என்றான். அசரீரி, அங்கராசன் முகம் நோக்கி, "கர்ண! குன்றாத வாய்மையை நீ கொடுந்தொழிலில் மேற்கொண்டு நின்றாய்; நினைத்தபடியே செய்," என்று பணித்தருளியது.

அதன் பின் கர்ணன், "என்னே எனக்குற்ற பேறு! இன்னாரென்னாமல் மாறாது தானம் பண்ணுகின்ற என்னிடம், தேவராசனாயுள்ள தேவேந்திரனே வந்து, 'தேகி' என்று என் கைத்தலம் மேற்படத் தனது செம்மலர்க் கை கீழ்ப்பட ஏற்பனாகில், யான் எங்ஙனம் தராது ஒழிவேன்? அன்றியும் முன்னம் சொன்னவார்த்தையைப் பின்னம் மறுத்துரைக்கும் அற்பனோ யான்?" என்று கூறிக் கவசகுண்டலங்களை அளித்தனன். அண்டர் யாவரும் அந்தர துந்துபி முழக்கி மலர் மழை பொழிந்தனர்.

"கடிப்பிடு கண்முரசம் காதத்தோர் கேட்பர்
இடித்து முழங்கியதோர் யோசனையோர் கேட்பர்
அடுக்கிய மூவுலகுங் கேட்குமே சான்றோர்
கொடுத்தா ரெனப்படுஞ் சொல்."

(நாலடியார்)

முதியவேதியனான இந்திரன் பெருமகிழ்ச்சியோடு கன்னனுக்கு ஆசிகூறிக் கவசகுண்டலம் பெற்றதும், அவ்விடம் விட்டு நீங்கி மீண்டு போய் ஸ்ரீ வாசுதேவனைக் கண்டு திருவடி தொழுது, கவசகுண்டலங்கள் காட்டித் தான் கர்ணனைக் கண்டவாறும், குறித்ததைக் கொண்டவாறும், பிறவும் விண்ணப்பம் செய்து, பின் தேவலோகத்திற்குப் போக விடைதர வேண்டினன்.

அப்பொழுது கிருஷ்ணன், "தேவர் கோவே! உன் மகனை வெல்வித்தல் காரணமாகக் கவசகுண்டலங்களை வாங்கி வந்தாய்; இது நன்றே; நீ மீண்டும் ஒரு முறை அவனிடம் வேதியனாய்ச் சென்று இரந்து, அவன் வலக்கையி லிருக்கும் சிகாமணியையும் வாங்கிக் கொண்டு உடனே வருவாயாக," என்றார்.

தேவேந்திரன், "எம்பெருமானே! உடன் பிறந்த கலசகுண்டலங்களோ அவனுக்கு உயிரானவை; அவன் உயிரைப் பறித்தாற்போல் அவற்றைக் கொண்டு வந்தேன். இனியும் அவன்பாற் சென்று சிகாமணியை வேண்டுவது தக்க தாகுமோ?" என்று தயங்கினர்.

அதற்குக் கிருஷ்ணன், "இந்திர! நன் மக்களைப் பெற்று வாழ விரும்புவோர் அருந்தவம் செய்வர்; இருநிதியும் ஈவர்; தம் மக்களுக்கு வரும் துயரை எவ்வகையாலும் தீர்ப்பர்; ஆதலால் நீ உன் புத்திரனைக் காப்பாயாக," என்றார்.

அதன்பின் தேவேந்திரன் மீண்டும் வேதியனாய், இரண்டாம் முறை கர்ணனிடம் சென்று, ஆசிகூறி நின்றான். கர்ணன் உடனே ஆசனம் விட்டெழுந்து பிராமணனுக்கு ஆசனம் கொடுத்து, "ஐயா! வந்த கருமம் என்கொலோ?" என்று பிரியமாகக் கேட்டனன். வேதியன், "கொற்றவனே! யான் விரும்பிவந்த பொருளைத் தருவையேல், நீ இதற்கு முன்பு பண்ணின தான தருமத்துக்குப் பலனுண்டு. உனக்குச் சுவர்க்கம் கிடைக்கும். நீ முன்னம் தந்த கோலமணிக் குண்டலத்தால் தக்க பலன் பெற்றேன். எனக்கு இன்னம் ஒரு குறை யுண்டு. நீ சிந்தை மகிழ்ந்து உன் செங்கைச் சிகாமணியைத் தந்தருள்வாயாக," என்று யாசித்தான்.

கர்ணன், தனது சிகாமணியை வாங்கி உடனே கொடுக்கப் புகுங்கால், பிராமணன், "கோவே! நீ வேத விதிப்படி அநுஷ்டானம் பண்ணி, அமுது செய்து, தகுதி யானபடி இருந்து, தருவாயாக," என்றான்.

கர்ணன், "அந்தணர்பெரும! நினைவுக்கும், வாய்மைக்கும், ஆயுளுக்கும், மனித வாழ்வுக்கும் நிலையில்லை. ஆதலின் யான் தரும்போதே தானம் வாங்கிக் கொண்டு போவீராக," என்று கூறிச் சிகாமணியைக் கொடுத்தனன்.

பிராமணன் பிரியத்துடனே வாங்கிக் கொண்டு புறப்பட்டுச் சிறிது தூரம் சென்ற

அளவில், அவன் பிரமகத்தி பாவம் செய்து போகின்ருன் என்று அப்பாவம் அவனைப் பின் தொடர்ந்து சென்று, இருள் கூர்ந்து மறைத்திட்டது. அது கண்டு பிராமணன் நடுங்கி, மீண்டும் போய்க் கர்ணனைக் கண்டு தன் உண்மை உருவம் காட்டி, "கர்ண! யான் தேவேந்திரன்; உன்னுடைய சத்தியத்தையும் தயையையும் அறிய வந்தேன். உன் சரீரத்தை உரித்துக் கவசகுண்டலமும் சிகாமணியும் வாங்கினேன். என் பாவம் தொலைய உனக்கு ஓர் அஸ்திரம் தருவேன். இது பகைவர் உயிரை வாங்கும்," என்று ஒரு வேலாயுதம் தரலாயினன்.

இந்திரன் இங்ஙனம் சொல்லுகையில் கர்ணன், "இமையவர் தலைவ! போர்க்களத்தில் என்னை வெற்றி கொள்வது எவர்க்கும் அரிது என்று எண்ணி, என்னிடம் கவசகுண்டலமும் சிகாமணியும் வஞ்சித்து வாங்கி, அருச்சுனனைக் காக்க வழி தேடினுய். குறித்தாரைக் கொல்லும் வேல் ஒன்று உண்டாயின், அதனை அர்ச்சுனனுக்குக் கொடுத்து அவனைக்கொண்டு என்னைக் கொல்ல லாகாதோ?," என்று அங்கையோடு அங்கைதாக்கி நகைஅரும்பி மறுத்துரைத்தான்.

இந்திரன் மீண்டும் கர்ணனை நோக்கி "உத்தமனே! இந்த வேலின் சக்தியைச் சமர பூமியில் காணலாம். இதனைத் தடுக்க எவராலும் ஆகாது; இவ் வாயுதத்தை நீ வாங்கிக்கொள்;

பார்த்தன்மீது இதனை ஏவாதிருப்பாயாக; வீமன் மகனாகிய கடோத்கசன் மீதே இதனை விடுவாயாக; அவன் உயிரே இதற்கு இலக்கு," என்று சொல்லி, அவ்வேலினைத் தந்து, அதற்குரிய மந்திரத்தையும் உபதேசித்து, அவனை விட்டு நீங்கிக் கண்ணபிரானிடம் வந்து நடந்த விருத்தாந்தம் யாவும் கூறி, விடை பெற்றுத் தேவலோகம் சென்றனன்.

---

## 12. குந்தி கர்ணனிடம் வரம் பெறுதல்

இந்திரனுக்கு விடை கொடுத்து அனுப்பிய பின், கண்ணபிரான் தாம் வந்த காரியம் முடிக்கத் திருவுளத்திற் கருதியவராய், குந்தி தேவியைக் குறுகி' "தாயே! யான் முன்னம் சொல்லியபடி நீ அங்கர்கோன்பால் இன்னே சென்று, அரவக் கணையை அவன் இருகால் எய்யாமல் இருக்க வரம் வேண்டி வருவாயாக," என்று சொல்ல, அவளும் உடன்பட்டுத் தளர்ந்த சிந்தையளாய் வழி நடந்துபோய்க் கர்ணன் வதியும் அரண்மனை வாயிலை நண்ணினள்.

ஆங்கிருந்த வாயிலோர் அவள் வரவைத் தங்கள் அரசனுக்கு அறிவிக்கக் கர்ணன் மிகுந்த அன்புடனே எதிர் கொண்டு வந்து, மாதாவை வணங்கித் தன் கோயிலுள் அழைத்துச் சென்று, முறைப்படி உபசரித்து, மணியாசனத்தில் வீற்றி

ருக்கச் செய்து, முழுமதியம் கண்ட அலைகடல் போல் உள்ளம் பொங்கி, "தாயே! பொற்கமலச் சேவடிகள் நோவ நடந்து நீர் என்னிடம் வந்தவாறு என்னே? என்றும் வாராத நீர் இன்று வந்தீர்! பாண்டவர்கள் உம்மை இங்கு விடுத்தனரோ? அல்லது அப் பாரளந்தான் தான் ஏவினனே?" என்று வினவினன்.

தான் கன்னிகையாயிருந்த காலத்தில், தூருவாச முனிவர் தனக்கு மந்திரம் உபதேசித்தருளினதும், சூரியனது அநுக்கிரகத்தால் பின்பு புத்திரனைக் கவச குண்டலங்களோடு பெற்றதும், பிள்ளையைப் பேழையில் இட்டுப் பேராற்றினில் விடுத்ததும், பிறவும் அவனுக்கு எடுத்துரைத்தாள் குந்தி. கர்ணன் அவ்விருத்தாந்தம் கேட்டு முறுவலித்து, உண்மை அறிய விரும்பி குந்தியுடன் பின்னும் பேசுவானாயினன் :—

கர்ணன் :—"பாண்டவர் ஐவர்க்கும் மாதாவாகிய நீர் எல்லோர்க்கும் உலக மாதாவன்றோ! இது சத்தியமே; எனக்குத் தாய் என்று பேசி, இன்று வந்து சொன்னால் இது மெய்ப்படுமோ? யான் எங்ஙனம் இதனை நம்புவது? நீர் என்னிடம் வேண்டுவது ஏதேனும் உண்டாயின் உரைமின்; வேண்டியது தருவேன்."

குந்தி (கண்ணில் நீர் பெருக) :—"கர்ண! யான் உன்னுடைய தாய்; நீ என்னுடைய புத்திரன்; இது உண்மையே. நம்புவாயாக!"

கர்ணன் :—“ தாயே ! யான் ஒரு விஷயம் சொல்கின்றேன் ; கேளும் ; இதற்குமுன் பல மகளிர் என் எதிரில் வந்து எனக்குத் தாய்மா ரென்று கூறினர் ; யான் அவர்களைச் சோதிக்க விரும்பி, என்னிடம் உள்ள தெய்வத் துகிலை அவர்களிடம் தந்து, அதனைப் போர்த்துக் கொள்ள வேண்டினேன் ; படாத்தின் சக்தி யறியாது அவர்கள் அதனைப் போர்த்துக் கொள்ள, உடனே அதனால் தகிக்கப்பட்டுச் சரீரம் இழந்து வெள்ளெலும்பு ஆனார்கள். நீர் அப் படாம் போர்த்து உம்முடைய திவ்விய சக்தியினால் பின்பு சரீரம் பெற்றீராகில், யான் உம்மைத் தாயென்று நம்புவேன்.”

குந்தி :—“ அத் தெய்வத் துகிலை என்னிடம் தருவாயாக ; உண்மை பிறப்பிக்கின்றேன்.”

கர்ணன் :—(அத் தெய்வத் துகிலை உடனே கொணர்வித்துத் தன் கையில் கொண்டு) “தாயே! இப் படாம் போர்த்த மாதர்கள் அழிந்தார்கள். நீரும் இது செய்யாமல், வேண்டுமளவு நிறை யாபரணமும், நிறை மாநிதியும், நவரத்தினமும் வாங்கிக்கொண்டு எழுந்தருள்வீராக.”

குந்தி தேவி அவ் வஸ்திரத்தைத் தைரிய மாகக் கையில் வாங்கி, “ நான் ஆதித்திய பகவானால் கர்ணனைப் பெற்றது இல்லையாயின், என் உடம்பை எரித்துத் தின்,” என்று அப் படாத்துடன் சத்திய வாக்கியம் பேசிப் படாத்தினைப்

போர்த்து, சங்கற்பத்தாலுள்ள மூன்றே முக்கால் நாழிகையும் பொறுத்து, பின்பு போர்வை களைந்து எதிரில் இனிது இருந்தனள்.

கர்ணன் அப்பொழுது மனம் தேறி, எல்லை யில்லாததோர் அன்பு கொண்டு, தாயின் பாதத் தில் வீழ்ந்து நமஸ்கரித்தான். குந்தி கர்ணனைத் தன் தடக்கைகளால் தழுவி, மடிமேல் வைத்துக் கண்ணீர் பாய, விம்மி விம்மி வெய்துயிர்த்துத் தளர்ந்து, "மைந்த! நீ பாண்டவர்களோடு கூடி வாழ்வாயாக; உனக்கு இனிய தம்பிமார் ஐவரையும் ஒன்றி, அவர்களை ஏவல் கொண்டு, மணியாசனத்துத் துளங்காமுடி வேந்தனாய் வீற்றிருந்து, நீ மண்ணாள வேண்டுமென்று நான் எண்ணி உனக்கு இதனைச் சொல்ல வந்தேன்," என்று அழைத்தாள்.

மண்ணெல்லாம் காத்தளித்து மன்னரெல்லாம் வந்திறைஞ்சக்
கண்ணெல்லாம் காதல் களிகூரப்—பண்ணுலாம்
பொற்றேரிற் போங்தேறித் போர்வேந்த ரைவரையும்
குற்றேவல் கொள்வாய் குறித்து." (பாரத வெண்பா)

அப்பொழுது கர்ணன் தாயை நோக்கிச் சொல்வான்:—"ஆவி அனைய ஐவர் தம்பியர் என் பதை இதுகாறும் அறிந்திலேன். என் தீவினை யின் கொடுமையால் நீரும் இதனை முன்னமே அறிவியாது இன்றே அறிவித்தீர். இனி என் செய்வது? இன்னனென அறியாத என்னுடன் இன்னடிசில் உண்டு, என்னை மன்னர் வணங்க

முடி கவித்து, உதவி புரிந்த துரியோதனனை எங்ஙனம் கைவிடுவேன்? அவன் எனக்குச் செய்த உதவியை உலகு அறியும். செய்ந் நன்றி மறத்தலும் கூடுமோ? மேலும் துரியோதனனே என்னிடம் அந்தரங்க விசுவாச முள்ளவன்.

"முன்னொரு நாள் நானும் இராசராசன் தேவி பானுமதியும் ஒரு தனி மண்டபத்திருந்து சூதாட்டம் ஆடிக்கொண்டிருக்கையில், இராச ராசன் துரியோதனன் மிருகவேட்டை போய் மீண்டு, கதுமென அங்கு வந்தது கண்டு, அவள் அச்சத்தால் எழுந்து செல்ல, அவன் வருதலைக் காணாத நான் அவளைத் தடுத்து, ஆட்டத்தின் இடையில் செல்லலாகாது என்று அவள் பூந் துகிலைப் பிடித்து இழுத்தேன். அப்பொழுது அவளது மேகலாபரணம் அற்று நவரத்தினம் உதிர்ந்து நான்கு திசைகளிலும் சிந்திப் பரந்தன.

"இதற்குள் துரியோதனன் என் அருகில் வர, யான் அவனைக் கண்டு மானம் குலைந்து அஞ்சித் திடுக்கிட்டு நின்றேன். அப்பொழுது துரியோதனன் என்மீது யாதொரு வெறுப்பும் கொள்ளாது கருணையுடன் அக மலர்ந்து நகை யரும்பி, 'கர்ண! யான் இம் மணிகளைக் கோக் கவோ? பொருக்கவோ?' என்றான். இத்தகைய தோழனுக்காக யான் என் உயிரை செருக்களத் தில் போக்காமலிருப்பதும் கூடுமோ?"

பாண்டவர்களுடன் கூடி வாழக் கர்ணன் இசையாமையைக் குந்தி அறிந்து மனம் வருந்தி, "கர்ண! தம்பியரோடு கூடிவாழ உனக்குக் கருத்து இல்லை போலும்! போர்க்களம் குறுகி வெற்றி கொள்ளக் கருதுவையேல், உன் தம்பியரைக் கொல்லாதிரு," என்றுவேண்டினள்.

அதற்குக் கர்ணன், "தாயே! யான் பார்த்தனைக் கொல்லுதலோ, அல்லது அவன் கையினால் யான் படுதலோ, இரண்டில் ஒன்று ஆமென்று மன்னர் பலர் அறிய உரைத்துள்ளேன். இது தவிராது," என்றான்.

குந்தி அவ் வார்த்தையைக் கேட்டு, அறிவற்று அகம் குழைந்து, "நன்மகனே! அங்ஙனமாயின் யான் வேண்டும் இரண்டு வரங்களையேனும் தருக. பஞ்சவரில் பார்த்தனுடன் நீ மலைந்தால், உன்னிடத்துள்ள அசுவசேனன் என்னும் நாகத்தை இரண்டாம் முறை அவன்மீது எச்சிற் கணையாகத் தொடாது ஒழிவாயாக; அன்றியும் தருமன், வீமன், நகுல சகாதேவர் ஆகிய இந் நால்வர் வந்து சமர பூமியில் உன்னை எதிர்த்தாலும், அவர்களைக் கொல்லாமல் இருப்பாயாக," என்று யாசித்தனள். அப்பொழுது கர்ணன் கை கூப்பிச் சொல்வானாயினன் :—

"தாயே! ஒரு கணையை ஒரு முறை தொடுக்க, அது பகைவன் தலையைத் துணிக்காது போமேல், மீண்டும் அதனைத் தொடுப்பது

மன்னர்க்கு ஆண்மையும் பெருமையும் ஆகுமோ? நாகாஸ்திரத்தை இரண்டாம் முறை விடேன். நீர் வேண்டியபடியே மற்றவர்களைக் கொல்லேன்; இவ் விரு வரங்களையும் இன்னே ஈந்தேன். அன்னையே! நீர் வேண்டிற்றுப் பெற்றீர்; யான் உம்மை இங்கு இரண்டு வரம் வேண்டுகிறேன்; யான் போர்க்களத்தில் வெம் சிலைக்கை அருச்சுனனால் மாண்டால், நீர் செருக் களத்தில் வந்து என்னை எடுத்து உம் மடியில் வைத்து, யான் உமது புத்திரன் என்பதை யாவரும் அறிய, பிறந்த நாளிற் செய்யாதவை யெல்லாம் இறந்த நாளிற் செய்து, தம்பியரைக் கொண்டு தீக்கடனும் நீர்க்கடனும் செய்வீராக. அவர்கள் அறிந்தால் தங்கள் பாகத்தை எனக்கு அளிப்பர். யான் பின்பு அதனை எனது தோழற்கே கொடுப்பேன். ஆதலால் அவர்கட்கு இராச்சியம் இல்லை யாகும்."

"பாரதத்துப் பட்டேன் படேனுகிற் பாண்டவர்பால்
ஆதரித்து நான்வருவே னாணங்கே—சீர்மிகுத்துன்
பொற்கமல பாதம் பணிகின்றேன் போவென்றான்
நற்றவத்தின் மிக்கோ னயந்து." (பாரத வெண்பா)

அதன் பின் கர்ணன் எல்லை யில்லாததோர் சந்தோஷத்துடன் மாதாவினைத் திருவடி தொழுது விடை கொண்டு தன் கோயில் நோக்கிச் செல்லப் புறப்பட, குந்தி தேவி கண்ணீர் சொரியச் சோகித்துப் புத்திரனைத் தழுவி, விட்

டுப் பிரிய மனமில்லாமல், அவனை அங்கே நிறுத்தி, ஸ்ரீ வாசுதேவன் இருக்கும் இடம் சென்று செய்தி யாவும் கூறினள்.

கண்ணபிரான் தம் திருவுள்ளக் கருத்து முடிந்ததென்று உவந்து, குந்தியை வீட்டி லிருக்கச் செய்து, பின்பு மணி நெடுந் தேரேறி, உபப்பிலாவியம் புறப்பட்டனர்.

"நாடு பலகடந்து நன்னெறிக ணீங்கிப்போய்க்
காடுமலே யாறுங் கைகடந்து—கோடாத
செங்கோ னடத்துந் தருமனகர் சென்றடைந்தா
னங்கோத வண்ணன் போயாங்கு." (பாரத வெண்பா)

ஸ்ரீ வாசுதேவன் எழுந்தருள்வது கண்டு, தருமபுத்திராதியோரும் விராடராசனும் மற்று முள்ளாரும் எதிர்கொண்டு அடிபணிந்து, மிகச் சிறப்புடன் அழைத்து வந்து, சபா மண்டபம் நண்ணி, எம்பெருமானை வீற்றிருக்கச் செய்து, தூதின் விருத்தாந்தம் உரைக்க வேண்டினர்.

ஐவர்க்குத் தூதாகிய எம்பெருமான், புன் முறுவல் செய்து தருமபுத்திரனை நோக்கி, தாம் அத்திநபுரம் சென்று நாகக் கொடியோனைக் கண்டு சமாதான மொழி கூறினமையும், அவன் சினந்து போர் புரியத் துணிந்தமையும், விதுரர் வில் முறித்தமையும், இரவில் துரியோதனன் வஞ்சனையாகப் போர் விளைத்தமையும், கன்ன னது மனக்கருத்து அறிந்தவாறும், துரோண புத்திரனைத் தடுத்தவாறும், கன்னன் திறல்

அழிக்கத் தேவேந்திரனை விடுத்துக் கவசகுண்டலம் வாங்கினவாறும், அதன் பின் அவனைக் கொண்டே சிகாமணியை அகற்றியவாறும், குந்தி தேவியைக் கர்ணனிடம் அனுப்பி நாகக் கணையைத் தடுத்தவாறும், மற்றுமுள்ள தகுதியான பிற விஷயங்களையும் சாந்தமாக எடுத்துரைத்தனர். பாண்டவர் இவை கேட்டு வியந்து வாசுதேவனை வாழ்த்தித் துதித்தனர்.

மாபாரதம் முட்டின்று முடியத் தக்க உபாயம் அனைத்தினையும் ஐவர்க்கு ஆங்கு எடுத்துரைத்து, ஊக்கமும் உற்சாகமும் பொங்கி எழச் செய்து, போர் தொடங்க நன்னாளும் குறிப்பிட்டு, பூபாரம் தீர்க்கக் காத்திருந்தனர் கண்ணபிரான்.

"படர்ந்தகானகந் திரிந்து மீண்டன்புடன் பணிந்த பஞ்சவர்க்காகக்
கடந்த ஞானியர் கடவுளர் காண்கலாக் கழலிணை சிவப்பேறத்
தொடர்ந்த நான்மறை பின்செலப் பன்னகத்துவசன் மாநகர்த்தூது
நடந்த நாயகன் கருமுகில் வண்ண மென்னயனம் விட்டகலாதே."
(வில்லி பாரதம்)

"கண்ணன் கழலிணை
நண்ணும் மனமுடையீர்
எண்ணும் திருநாமம்
திண்ணம் நாரணமே." (திருவாய் மொழி)

## ஸ்ரீ கிருஷ்ணன் தூது ஸமாப்தம்

சுபம்

# அரும்பத அகராதி

அகம்-உள்ளம், மனம்
அங்கநாடன்-அங்கதேசத்திற்கு அரசன் (கர்ணன்)
அங்கி-அக்நி, நெருப்பு
அசஞ்சலமான-திடமான
அசரீரி-சரீரம் இல்லாதது
அஞ்சலி-கூப்பிய கை
அஞ்சனம்-மை
அடல்-வலிமை
அடவி-காடு
அடிசில்-உணவு
அணங்கு-அழகு மிகுந்த பெண்
அண்ணல்-பெருமான்
அந்தம்-முடிவு
அபராங்நம்-பிற்பகல்
அமரர்-தேவர்
அமர்-போர்
அமளி-படுக்கை
அயின்று-சாப்பிட்டு
அரங்கு-சபைகூடும் இடம், மேடை
அரி-சிங்கம்
அரவம்-சர்ப்பம்
அல்லல்-துன்பம்
அவதி-எல்லை
அவனி-பூமி
அரவுயர்த்தோன்-துரியோதனன்
அவா-ஆசை
அழுக்காறு-பொறாமை
அனைய-போல
அறிகுறி-அடையாளம்
அறைந்தனன்-சொன்னான்
அற்றம்-சோர்வு, மெலிவு
ஆகாயவாணி-ஆகாயத்தினின்று உண்டாகும் வாக்கு
ஆடவர்-ஆண்மக்கள், வீரர்
ஆண்டு-வருஷம், அவ்விடத்தில், ஆட்சிசெய்து
ஆரணியம்-காடு
ஆர்ப்ப-ஒலிக்க
ஆர்வம்-அன்பு
ஆழி-சமுத்திரம், சக்கரம், மோதிரம்
ஆற்றல்-வல்லமை
ஆனிரை-பசுக்கூட்டம்
இடுக்கண்-துன்பம்
இம்மியேனும்-சிறிதேனும்
இயம்-வாத்தியம்
இயல்-தன்மை
இரட்ட-அசைய
இறுத்தான்-ஒடித்தான்
இறும்பூது-ஆச்சரியம்
இறை-தலைவன்
இறைஞ்ச-வணங்க
இன்னல்-துன்பம்
ஈட்டம்-கூட்டம்
ஈண்டு-இவ்விடத்தில்
உடன்று-கோபித்து
உட்கும்-அச்சுறுத்தும்
உந்த-தள்ள
உம்பர்-தேவர், மேல்
உவகை-சந்தோஷம்
ஊரும்-செலுத்தும்
ஊன்-மாமிசம்
எச்சிற்கணை-ஒரு முறை விட்ட கணை
எயிறு-பல்
எழில்-அழகு
ஏகாந்தமாக-தனிமையாக
ஏது (ஹேது)-காரணம்
ஒற்றர்-தூதர்
ஒன்னலர்-பகைவர்
ஓச்சுதல்-ஓங்குதல், செலுத்தல்
ஓதம்-கடல்

ஓம்பல்-பாதுகாத்தல்
கங்கைமகன்-பீஷ்மன்.
கடாம்-மதஜலம்
கட்டாண்மை-உறுதியான
கட்டுரை-உறுதிமொழி, பராக்கிரமம்
கணம்-கூட்டம்
கணை-அம்பு
கண்ணாயிரத்தான-இந்திரன்
கண்ணுதலான்-பரமசிவன்
கண்வளர்தல்-தூங்குதல்
கதலி-வாழை
கதிரவன்-சூரியன்
கதுமென-உடனே
கமுகு-பாக்கு
கயற்கண்ணி-மீனாட்சி
கரந்து-ஒளித்து
கரி-யானை(கரத்தையுடையது)
கலன்-ஆபரணம்
கவரி-சாமரம்
கவறு-சூதாடும் கருவி
கழல்-பாதம்
களிறு-யானை
களைதல்-நீக்குதல்
கனன்று-கோபித்து
காகுத்தன்-இராமன்
காசினி-பூமி
காயம்-உடல்
கார்-மேகம்
கால்-காற்று
கிளைஞர்-உறவினர்
குடதிசை-மேற்கு
குடில்-குடிசை
குணதிசை-கிழக்கு
குமுதம்-பேரொலி
குருதி-இரத்தம்
குழல்-கூந்தல்
குழாம்-கூட்டம்
கூறு-பாகம்
கூற்றுவன்-யமன்
கொங்கு-வாசனை
கொட்டில்-கொட்டகை
கொண்டல்-மேகம்
கொற்றம்-ஜயம்
கொற்றவன்-அரசன்
கோ-அரசன்
கோடல்-கொள்ளுதல்
கோது-குற்றம்
கோத்தருமம்-இராஜதருமம்
கோன் அரசன்
சந்து-அழகு, சமாதானம்
சமர்-போர்
சயனம்-படுக்கை
சரம்-அம்பு
சாகரம்-சமுத்திரம்
சாலும்-போலும்
சான்றோர்-பெரியோர்
சிலை-வில், கல்
சீற்றம்-கோபம்
சுரர்-தேவர்
சுல்கம்-வரனுக்காக ஏற்படுத்தும் நிபந்தனை
சுளித்து-கோபித்து
சூழ்ச்சி-உபாயம்
சூள்-சபதம்
செருவில்-போரில்
சென்னி-தலை
சேய்-மகன்
சேய்மை-தூரம்
ஞாலம்-பூமி
ஞான்று-நாள், காலம்
தகைந்து-தடுத்து
தண்டு-கதாயுதம்
தநு-வில்
தரணி-பூமி

தவிசு-ஆசனம்
தளை-விலங்கு
தனஞ்சயன்-அருச்சுனன்
தாது-மகரந்தப்பொடி
தாமம்-மாலை
தானவர்-அசுரர்
தானை-சேனை, வஸ்திரம்
திகிரி-சக்கரம்
திண்ணம்-நிச்சயம்
திரு-இலக்ஷ்மி
திரை-அலை
திறல்-வலிமை
தினகரன்-சூரியன்
நீட்டும்-எழுதும்
துகில்-வஸ்திரம்
துங்கம்-சிறந்த
துலை-தூரம்
துவரை-துவாரகை
துறந்து-நீங்கி
தூய-பரிசுத்தமான
தொங்கல்-மாலை
தையல்-அழகு, பெண்
நஞ்சு-விஷம்
நண்ணி-அடைந்து
நயனம்-கண்
நல்கு-கொடு
நா-நாக்கு
நாண்-வெட்கம், வில்லின் கயிறு
நானிலம்-பூமி
நிதியம்-நிதி ('அம்' சாரியை)
நிருபம்-கடிதம்
நிருபர்-அரசர்
நிருமித்து-ஏற்படுத்தி
நிரை-கூட்டம்
நிழற்ற-நிழல்தர
நீறு-சாம்பல்
நுதல்-நெற்றி

நெட்டுயிர்ப்பு-பெருமூச்சு
நேமி-சக்கரம்
பகர்தல்-சொல்லுதல்
பங்கயம்-தாமரை
படாம்-வஸ்திரம்
படி-பூமி
பணி-வேலை, கட்டளை, வணங்கு
பதாகை-கொடி
பந்தி-வரிசை
பரி-குதிரை
பரிசு-வெகுமதி
பரிதி-சூரியன்
பரிபாலகர்-பாதுகாப்பவர்
பரிவு-அன்பு
பரிவேடம் - பரிவேஷம் (சூரியனைச்சூழத்தோன்றும்வட்டம்)
பல்லியம்-பலவகை வாத்தியம்
பன்னகத்துவசன் - துரியோதனன் (அரவக்கொடியோன்)
பாங்கு-அழகு
பாஞ்சாலி - திரௌபதி (பாஞ்சாலனது பெண்)
பாயல்-படுக்கை
பார்-பூமி
பார்த்தன்-அருச்சுனன் (பிரதையின் மகன்)
பிடர்-கழுத்து
பிணித்து-கட்டி
பீடு-பெருமை
புக்கனன் - புகுந்தான் ('புகு' எனும் பகுதி இரட்டித்துக் காலம் காட்டிற்று)
புத்தேளிர்-தேவர்கள்
புயல்-மேகம்
புரம்-பட்டணம்
புரவி-குதிரை
புரவு-காத்தல்

புல்லோர்-கீழ்மக்கள்
புறங்காணுதல் - தோற்றோடச் செய்தல்
புனல்-ஜலம்
புனிதம்-பரிசுத்தம்
பூண்-ஆபரணம்
பூந்துகில்-அழகிய ஆடை
பேதை-அறிவிலி
பை-படம்
பொய்கை-குளம்
பொறாமல்-சகியாமல்
பொறை-பொறுமை
பொற்பு-அழகு
போது-புஷ்பம்
போந்து-போய்
போற்றி-துதித்து
மதனப்புத்தேள்-மன்மதன்
மதியம்-சந்திரன்
மரபு-வமிசம்
மருங்கு-பக்கம்
மருள்-மயக்கம்
மலேந்து-எதிர்த்து
மறம்-அதருமம்
மறு து-மறுக்காமல்
மன்னவை-ராஜசபை
மாசு-சுற்றம்
மாண்பு-மேன்மை
மாரி-மழை
மாற்றார்-பகைவர்
மாயன்-திருமால்
முகடு-உச்சி
முட்டு-தடை
முகில்-மேகம்
முந்நீர்-சமுத்திரம்
முரசுயர்த்தோன் - தருமபுத்திரன்
முரண்-மாறுபட்ட
முழக்கம்-சப்தம்
முளரி-தாமரை
முறுவல்-சிரிப்பு
முனிந்து-கோபித்து
மூவாமருந்து-அமிருதம்
மெல்லியர் எழுவர்-ஸப்தமாதர்
மேகலாபரணம்-ஒட்டியாணம்
மேதினி-பூமி
மோடி-துர்க்கை
யாக்கை-சரீரம்
வடு-குற்றம், பழி
வண்ணன்-நிறமுடையவன்
வசை-குற்றம்
வரை-மலே
வள்ளல்-வரையாது கொடுப்ப [வன்
வனப்பு-அழகு
வற்புறுத்தல்-உறுதிப்படுத்தல்
வாகைசூடல் - வெற்றிகொள் ளல்
வாசவன்-இந்திரன்
வாணுள்-வாழ்நாள்
வாதை-துன்பம்
வாய்மை-சத்தியம்
வாளி-அம்பு
விசயன்-அருச்சுனன்
விசும்பு-ஆகாயம்
விதானம்-மேற்கட்டு
வியன்-பெரிய
விறல்-வலிமை
வெகுண்டு-கோபித்து
வெகுளி-கோபம்
வேணி-ஜடை
வேள்வி-யாகம்
வைகல்-நாள்
வையம்-பூமி
வைவேல்-கூர்மையானவேல்

---

The Jupiter Press, 16, Sembudoss Street, Madras.

N. PALANIAPPAN.
V. FORM.
?. M. S. H. S., Karaikudi

# நமது பிரசுரங்கள்

**For Detailed Study**

| | Rs. | A. | P. |
|---|---|---|---|
| செந்தமிழ் மஞ்சரி (மலர் 1) ... | 0 | 7 | 0 |
| ஷை (மலர் 2) ... | 0 | 9 | 0 |
| ஷை (மலர் 3) ... | 0 | 10 | 0 |
| ஷை (மலர் 4) ... | 0 | 12 | 0 |
| கவிமணி மாலை (முதல் பாகம்) ... | 0 | 7 | 0 |
| ஷை (இரண்டாம் பாகம்) | 0 | 7 | 0 |

**For Non Detailed Study**

| | Rs. | A. | P. |
|---|---|---|---|
| இராஜபுத்திர விஜயம் (முதல் பாகம்) | 0 | 15 | 0 |
| சிவாஜி ... ... | 0 | 15 | 0 |
| அரிச்சந்திரன் சரிதை ... ... | 0 | 12 | 0 |
| பால ஸ்காந்தம் ... ... | 0 | 8 | 0 |
| பாண்டவ தூதன் ... ... | 0 | 6 | 0 |
| பரிணய பஞ்சகம் ... ... | 0 | 6 | 0 |
| பால ராமாயணம் ... ... | 0 | 5 | 0 |
| பால பாரதம் ... ... | 0 | 5 | 0 |
| பால பாகவதம் .... ... | 0 | 5 | 0 |
| பால வாமனன் ... ... | 0 | 4 | 0 |
| பால கதா மஞ்சரி (மலர் 1) ... | 0 | 4 | 0 |
| பால கருடன் ... ... | 0 | 4 | 0 |
| ரசாயன பரிசோதனை ... ... | 0 | 8 | 0 |
| ஷை (நல்ல கட்டடம்) | 0 | 10 | 0 |
| பாலர் கதைப்பாடல் (முதல் புத்தகம்) | 0 | 3 | 0 |
| ஷை (இரண்டாம் புத்தகம்) | 0 | 3 | 0 |
| சூரபாநு ... ... | 0 | 7 | 0 |
| நன்னூற் சாரம் ... ... | 0 | 10 | 0 |
| போதனாமுறை பாடசாலைக்குரிய பூகோளம் | 1 | 0 | 0 |
| ஸ்ரீ ருக்மிணி பரிணயம் (கும்மிப்பாட்டு) | 0 | 1 | 0 |

ஜயம் கம்பனியார்

புத்தக வியாபாரிகள், நுங்கம்பாக்கம், சென்னை.